

# உங்கள் மகளின் எதிர்கால வாழ்க்கைக்கு பொறுப்பு நீங்கள்

அவளது வருங்கால, முற்றிலும் சுகமான வாழ்க்கையை நிச்சயப்படுத்துவதற்கு இன்றே பணம் சேமிக்கத் தொடங்குங்கள்.

சேமிக்கவும் மற்றும் கரண்ட், ஸேவிங்ஸ், ஃபிக்ஸெட், ரெக்கரிங் டிபாஸிட்டுகள் ஆகிய கணக்கு தொடங்குவதற்கான எல்லாவித சௌகரியங்களையும் வழங்குகின்றோம்.




தலைமை அலுவலகம் · கல்கத்தா

UCO-3/73

ஸோலோ காதல் மலர்கிறது...

# இன்பக் கடலில் திளைத்து மகிழ!



SOLO

# ஸோலோ

உங்கள் இளமையின் துடிப்பு,
காதல், ஆசைவெள்ளம், உங்கள்
காதலுடன் கொஞ்சிக் குலவி,
அள்ளி அருந்திட... ஸோலோ.
துடிப்புள்ள எலுமிச்சை பானம்!

ஸோலோ காதல் பானம்...
இளம் உள்ளங்கள் கீதம்!



ADWAVE-KH-103 C

"என் மனைவி எத்தனையோ நீலங்களை உபயோகித்துப் பார்த்திருக்கிறாள்...ஆனால் ராபின் ப்ளூ எங்கள் குடும்பத் துணி-உடைகளை, மிகப் பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குவதை நன்கு காண்கின்றாள்"

திரு கணேஷ், ஊக்கமுள்ள
வர்த்தகச் செயலதிகாரி



இதனை லட்சக்கணக்கான குடும்பத் தலைவர்களும் ஒப்புக் கொள்ளுகின்றனர்




வெள்ளைத் துணி-உடைகளை, சோப்பு அல்லது டிடர்ஜென்ட் கொண்டு வெளுக்கச் செய்வது மட்டும் போதாது. மிகப் பளிச்சிடும் தூயவெண்மை ஆக்குவதற்கு அவற்றை ராபின் ப்ளூவில் மூழ்கச் செய்தெடுக்க வேண்டும். ஒரு வாளி தண்ணீரில் ஒரு சிட்டிகை ராபின் ப்ளூ அற்புதமாக வேலை செய்யும்.

# ராபின் ப்ளூ

வெள்ளைத்துணி-உடைகளை மிகப் பளிச்சிடும் தூயவெண்மை ஆக்குகின்றது

ARBC-37 TAM

**பிரமாதீச, ஆவணி 31 — செப். 16, 1973**

# பொருளடக்கம்







கல்கி



"பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளுக்கும், பற்களுக்கும் தீங்கு இழைக்கக்கூடும்..."

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக**
இருக்கும்போது பழைமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!




...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.



கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 33 - இதழ் 7

# முன்னேற்றத்துக்கு முதலீடு

அடுத்த ஐந்தாண்டு திட்ட காலத்தில் தமிழ்நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் மாநில முன்னேற்றத்துக்கும் பல்வேறு இனங்களில் 1532 கோடி ரூபாய் முதலீடு செய்ய வேண்டும் என்று தமிழ்நாடு அரசு திட்டம் தீட்டியிருக்கிறது. இனவாரியாகப் பார்க்கும்போது, விவசாயத் துறைக்கு 108 கோடியும், நீர்ப்பாசன வசதிகளுக்கு 188 கோடியும், தொழில் துறைக்கு 107 கோடியும், மின்சார அபிவிருத்திக்கு 446 கோடியும் தேவைப்படும் என்று திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. இதர இனங்களிலும் பரவலாக முதலீட்டுக்கு ஒதுக்கீடுகள் செய்யப்பட்டுள்ளது. நிபுணர்கள் தீட்டிய திட்டம். எனவே குறை சொல்வதற்கில்லை.

நான்காவது திட்ட ஆண்டுகளில் ஏற்பட்ட அனுபவத்தைக் கருத்தில் கொண்டு ஐந்தாவது திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. இது முற்றிலும் சரியே. விவசாயப் பெருக்குக்கும், பாசன வசதிக்கும் போதிய முன்னேற்பாடுகள் செய்யப்படுவதை வரவேற்க வேண்டும். விலைவாசிகள், முக்கியமாக உணவுப்பண்டங்களுக்கான விலைகள் குறைந்த அளவிலேயே இருக்கும்படி பார்த்துக்கொள்ள அதிக விளைச்சலும்; உச்சபட்ச மகசூலும் இன்றியமையாதவை. இதற்கு வகை செய்யும் எந்த நடவடிக்கையையும் எல்லோரும் ஆதரிக்கவே செய்வர்.

சென்ற ஆண்டின் பயங்கர அனுபவம் மின்விசைத் தட்டுப்பாடும், அதன் விளைவாகப் பல தொழில்கள் உற்பத்தியைக் குறைத்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதும் ஆகும். இந்த ஆண்டிலும் கூட மின்வெட்டு சிறிதளவு வரக்கூடும் என்றும், அடுத்த இரண்டு மூன்று மாதங்களில் பருவமழை திருப்திகரமாக இல்லாவிட்டால், மின்வெட்டின் அளவு அதிகரிக்கவும் கூடும் என்றும் எச்சரிக்கை இப்போதே விடப்பட்டுள்ளது. மின்சார உற்பத்தியில் தமிழ் நாட்டின் நிலைமை திருப்திகரமாக இல்லை என்பதை இது எடுத்துக் காட்டுகிறது. ஆகவே இந்தத் துறையில் 446 கோடி ரூபாய் செலவு செய்து ஐந்தாண்டு திட்ட கால முடிவிலாவது கணிசமான அபிவிருத்தியை உண்டாக்க வேண்டும் என்று மாநில அரசு திட்டமிட்டிருப்பதை வரவேற்க வேண்டும். இதில் பெரும்பாகம் அனல் நிலையங்களை ஸ்தாபிப்பதிலேயே செலவிட வேண்டும். நீர் மின் நிலையங்களை மிதமிஞ்சி நம்பியதே நமது கஷ்டங்களுக்கு முக்கிய காரணம். மழை குறையும் ஆண்டுகளில் மின்சாரம் தட்டில்லாமல் இருப்பதற்கு நிலக்கரியையோ அணுசக்தியையோ ஆதாரமாகக் கொண்ட நிலையங்களே உதவும்.

புது அணுமின் நிலையம் ஏற்படுத்தவும் இப்போது உருவாகிவரும் கல்பாக்க நிலையத்தின் அணுமின் உற்பத்தியை அதிகரிக்கவும், நெய்வேலி நிலையங்களின் உற்பத்தியை அதிகரிக்கவும் திட்டங்கள் வற்புறுத்தப்படுவது மிகவும் பொருத்தமேயாகும். இவையனைத்தும் மத்திய அரசு கவனிக்க வேண்டிய அம்சங்களாகையால் தமிழ்நாட்டின் தேவை, அவசியத்தைப் பற்றிச் சமயம் ஏற்பட்டபோதெல்லாம் மாநில அரசு வலியுறுத்துவது விரும்பத்தக்கதே.

வளர்ச்சிக்கு அவசியமான ஆதார அமைப்புக்கள் மின்சாரமும், சாலைப் போக்குவரத்தும் ரயில் போக்குவரத்துமாகும். முன்னேற்பாடாக இந்தத் துறைகளில் கவனம் செலுத்தப்படுவதும் வரவேற்கப்பட வேண்டியதே.

திட்டங்கள் தீட்டுவது முக்கியமாக உத்தேசத்தையும், தேவைகளையும் விளக்கி வைக்கவே. செயல்படும்போது பல காரணங்களினால் திட்டங்கள் சிதறிப் போகக் கூடும். நான்காவது திட்ட அனுபவம் இதற்குச் சான்று. தவிரவும், இப்போது ஐந்தாவது திட்டத்துக்குப் போடப்பட்ட உத்தேச முதலீடு நான்காவது திட்ட காலத்தில் செலவு செய்யப்பட்ட தொகையை விட இரு மடங்குக்குமேல் அதிகமாகும்.

இதில் பெரும் பாகம் ரூபாயின் மதிப்புக் குறைவை ஈடுசெய்வதே யாகும். உண்மையான முதலீடு வெகுவாக அதிகரிக்கவில்லை.

திட்டம் போடுவதிலுள்ள தீவிரம் நிதி வசதியில் நிர்ப்பந்தங்கள் ஏற்படும் போது பாதிக்கப்படலாம். அப்போது பிரத்தியட்ச நோக்குடன் அவசியமானவை, அவசியமில்லாதவை எனப் பாகுபாடு செய்து, அவசியமானதை உடனடியாக நிறைவேற்றி வைக்கத் தயங்கக் கூடாது. மின்விசைப் பெருக்கம் எப்படிப் பார்த்தாலும், அத்தியாவசியமான இனமாகவே கருதப்பட வேண்டும். அமல் செய்வதில் முதல் இடம் பெற வேண்டும்.

திட்டம் என்பதை மத்திய — மாநில அரசுச் சண்டையில் மற்றோர் ஆயுதம் என்று கருதக் கூடாது. அத்தியாவசியமான தேவை, வசதி வாய்ப்பு, ஒத்துழைப்பு, நேர்மையான செயல்முறை ஆகிய அடிப்படைகளின் மீது செயலாற்றமுற்பட வேண்டும். இவ்விதம் நடைபெறும் என்று நம்புவோம்.

# விவேகமற்ற முடிவு

'அமெரிக்கன் ரிப்போர்ட்டர்' என்ற சஞ்சிகை சென்ற மாத இறுதியிலிருந்து நிறுத்தப்பட்டு விட்டது என்ற செய்தி பலருக்கு வருத்தத்தை உண்டாக்கி யுள்ளது.

இருபத்திரண்டு ஆண்டுகளாக இந்தியாவில் அமெரிக்கச் செய்தித் துறையினரால் பிரசுரிக்கப்பட்டு, அமெரிக்க நாட்டைப் பற்றியும், மக்களைப் பற்றியும், இலக்கிய, விஞ்ஞான வளர்ச்சி குறித்தும் அறிவை வளர்த்து மக்களிடையே ஒரு பெரு மதிப்புப் பெற்று உலவிக் கொண்டிருந்தது இப்பத்திரிகை. ஆங்கிலத்தில் மட்டுமே ஆரம்பத்தில் தொடங்கப்பட்டு, பின்னர் படிப்படியாகத் தமிழ், தெலுங்கு, மலையாளம், ஹிந்தி முதலிய பதினொரு மொழிகளில் பிரசுரிக்கப்பட்டு வந்தது. ஆங்கில சஞ்சிகை ஏறக்குறைய ஒரு லட்சம் பிரதிகளும் தமிழ் சஞ்சிகை உச்ச கட்டத்தில் 65,000 பிரதிகளும், இறுதி மாதங்களில் 42,000 பிரதிகளும் விற்பனையாகிக் கொண்டிருந்தன. எல்லா மொழி சஞ்சிகைகளையும் சேர்த்தால் சுமார் ஐந்து லட்சம் வாசகர்கள் அமெரிக்கன் ரிப்போர்ட்டரைப் படித்துக்கொண்டிருந்தனர். இவர்கள் அனைவருக்கும் இந்தச் சஞ்சிகைகள் மூடப்பட்டு விட்டன என்பது முக்கியமான தொடர்பு ஒன்று துண்டிக்கப்பட்டு விட்ட உணர்ச்சியை உண்டாக்கியுள்ளது.

இந்திய — அமெரிக்க உறவுக்குச் சாதாரண மக்கள் மட்டத்தில் இணைப்புப் பாலம்போல் செயல்பட்டுக் கொண்டிருந்த இப்பத்திரிகை நிறுத்தப்பட்டதற்குச் சிக்கன நடவடிக்கையோ அல்லது பி.எல். 480 உதவி தொடர்பாகத் தற்போது இங்கு முடங்கிக் கிடக்கும் பெருவாரியான அமெரிக்கப் பணம் குறித்த சர்ச்சைகளோ காரணமல்ல என்று தெளிவு படுத்தப்பட்டுள்ளது. ஆயின் உண்மைக் காரணங்கள் தெரியவில்லை. அமெரிக்க ரிப்போர்ட்டரினால் ஆகும் செலவு அமெரிக்க அரசாங்கத்துக்குக் கொசுக்கடி மாதிரி. இந்தச் சஞ்சிகைகளினால் ஏற்பட்டுக் கொண்டிருந்த நன்மைகளை நன்கு உணர்ந்துள்ள அமெரிக்கத் தூதராலயம் இந்த விவேகமற்ற முடிவை எடுத்திருக்கும் என்று நம்ப முடியவில்லை. கண்காணாத தூரத்திலுள்ள தலைமைக் காரியாலயத்திலுள்ளவர்கள் உண்மை நிலவரம் புரியாமல் எடுத்த முடிவாகவே தோன்றுகிறது. சஞ்சிகைகள் மூடப்பட்டு விட்டாலும், அமெரிக்க மக்களைப் பற்றிய செய்திகளை நம் மக்களுக்கு அகில இந்திய வானொலி மூலமாகவும், உள்நாட்டுப் பத்திரிகைகள் வாயிலாகவும் வழங்கி, அமெரிக்கன் ரிப்போர்ட்டர் நின்றுவிட்ட குறையைப் பூர்த்தி செய்யப் போவதாகச் சொல்லப்படுகிறது. அமெரிக்கச் செய்திகளை ஒலிபரப்ப வானொலி காத்துக் கொண்டிருக்கிறது என்றோ, உள்நாட்டுப் பத்திரிகைகள் ஓரளவுக்கு மேல் ஒத்துழைக்கத் தயாராக இருக்கின்றன என்றோ வாஷிங்டன் எண்ணினால் அதை ராஜதந்திரமின்மை என்றுதான் வர்ணிக்க வேண்டும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## வீர வாஞ்சியும் மணியாச்சியும்

மணியாச்சி இரயில் நிலையத்துக்குச் சுதந்திரப் போராட்ட வீரன் வாஞ்சிநாதனின் பெயரை வைக்க வேண்டும் என்ற தமிழ் நாடு அரசின் கோரிக்கையை மத்திய அரசு ஏற்க வில்லை என்கிற விஷயத்தைச் சுட்டிக்காட்டி உடனே மத்திய அரசின் மேல் மக்களுக்குக் கோபத்தையும், வெறுப்பையும் மூட்டிவிட முயல்கிறார் தமிழ்நாட்டு முதலமைச்சர். ஒரு வேளை இதைக் காட்டி, ''பாருங்கள்! மாநில சுய ஆட்சி இல்லாததால்தான் இந்தத் தொல்லை'' என்றுகூட அவர் சொல்லலாம்!

இது விஷயமாகத் தமிழ்நாடு காங்கிரஸ் செயலாளர் திரு நெடுமாறன் ஒரு யோசனை கூறியிருக்கிறார். அதாவது தனது அதிகாரத்

துக்கு உட்பட்ட மணியாச்சி என்ற ஊரின் பெயரைத் தமிழ்நாடு அரசு முதலில், 'வீரவாஞ்சி' என்று மாற்றினால் அப்புறம் இரயில் நிலையத்தின் பெயரை மாற்றச் சொல்லிக் கோருவது சுலபமாயிருக்கும் என்பது அந்த யோசனை. 'வீரவாஞ்சி மணியாச்சி' என்று இரு பெயர்களையும் சேர்த்தே வைக்கலாம் என்பது மற்றொரு பிரமுகரின் யோசனை.

வீரவாஞ்சிக்குத் தமிழக சரிதத்தில் எப்படி ஒரு முக்கியத்துவம் உள்ளதோ, அதேபோல் அவ்வீரரின் காரணமாகவே மணியாச்சி ரயில் நிலையமும் சரித்திர முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. சரித்திர முக்கியத்துவம் உள்ள பெயர்களை இஷ்டப்படியெல்லாம் இன்று ஆட்சியில் உள்ளவர்களின் விருப்பு வெறுப்புக்களுக்கு இணங்க மாற்றிக் கொண்டிருப்பது சிறிதும் சரியாகாது. வேணுமானால் மணியாச்சி ரயில் நிலையத்தில் வாஞ்சி நாதனின் சிலை ஒன்றை நிறுவுவது, அருகே, அச்சரித்திர நிகழ்ச்சிபற்றிய குறிப்பைக் கல்லிலே பொறித்து வைப்பது போன்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்.

## தொழில்களுக்கு உதவி

சென்னையிலுள்ள சிறு தொழில் சங்கங்களின் கூட்டமைப்பில் சொற்பொழிவு ஆற்றும்போது சிறு தொழில் உரிமையாளர்களுக்கு மகிழ்ச்சி தரும் சில விவரங்களைச் சிறு தொழில்களுக்கான கமிஷனர் திரு என்.என். தாண்டன் அவர்கள் கூறியிருக்கிறார்.

எல்லாச் சிறு தொழில்களுக்கும் தத்தம் தயாரிப்புக்களை விற்பதில் மார்க்கெட் விவரங்களைச் சேகரித்துத் தந்து உதவும் அமைப்புக்களை நாடு எங்கும் ஏற்படுத்திப் போவதாகத் தெரிவித்த அவர் மேலும் பல விவரங்களைக் கூறினார்:

''1960ம் ஆண்டில் நம் நாட்டில் மொத்தம் 51,000 சிறு தொழிற்சாலைகள்தான் இருந்தன. இன்று அவற்றின் எண்ணிக்கை வளர்ந்து பெருகி, 3,20,000 ஆகியுள்ளது. தமிழ்நாட்டில் மட்டும் 16,000த்திலிருந்து 29,500 ஆக அவை பெருகியுள்ளன. நாட்டின் எல்லாத் தொழிற்சாலைகளுமாக உற்பத்தி செய்யும் மொத்த உற்பத்தி விகிதத்தில் முப்பது சதவிகிதத்தைச் சிறு தொழில்களே உற்பத்தி செய்கின்றன. சிறுதொழில்களுக்குக் கச்சாப் பொருள்கள் கிடைப்பதில் இருந்த சிரமங்களெல்லாம் மாறிச் சில மாதங்களாக நிலைமை அபிவிருத்தி அடைந்துள்ளது.''

ஆனால் சிறு தொழில்கள் சங்கக் கூட்டமைப்பின் தலைவராக இருக்கும் திரு எம். எஸ். பார்த்தசாரதி பேசும்போதோ, ''கச்சாப் பொருள்கள் சரியாகக் கிடைக்காததால் பல சிறு தொழில்கள் மூடும் நிலைமைக்கு வந்துவிட்டன. மத்திய அரசாங்கத்தின் தவறான கொள்கைகளே இதற்குக் காரணம் என்று சொல்லலாம். சரியான உதவிகள் கிடைக்க வேண்டுமானாலும் சிறு தொழில்களுக்கான கமிஷனரின் பிரதிநிதி ஒருவரே தேசியமயமாக்கப்பட்ட பாங்குகளின் போர்டில் அங்கம் வகிக்க வேண்டும்'' என்றார்.

இதில் கமிஷனர் கூறியது உண்மையா? சிறு தொழில் சங்கக் கூட்டமைப்பின் தலைவர் கூறியது உண்மையா? இரண்டு பேர் கூறியதிலும் உள்ள முரண்பாடு உண்மை என்பதில் சந்தேகமில்லை!

இந்தத் தருணத்தில் 'மீண்டும் மின்வெட்டு வரலாம்' என்ற அபாய அறிவிப்பு வேறு சிறு தொழில் நிறுவனங்களை, ஏன் பெரிய தொழிலகங்களைக்கூடப் பீதிக்குள்ளாக்கியிருக்கிறது. பருவ மழை பொய்க்காமல் காப்பாற்றட்டும்.

## டாக்ஸி ஸ்டாண்டில் டெலிபோன்

சென்னை நகரில் மிகவும் முக்கியமான பன்னிரண்டு டாக்ஸி நிலையங்களில் வாடிக்கைக்காரர்கள் ஃபோன் செய்து அழைப்பதற்கு ஏற்ற முறையில் 'டெலிபோன் பூத்'கள் அமைக்கப்படும் என்று மத்திய தபால் தந்தித் துறை அமைச்சர் திரு பகுகுணா அறிவித்திருக்கிறார். ஏற்கனவே தில்லியில் மட்டும் உள்ள இந்த வசதி இப்போது சென்னைக்கும் கிடைக்கிறது.

வழக்கமாகச் சென்னை நகரில் டாக்ஸி உபயோகிக்கும் ஓர் அன்பர், 'நேரிலேயே, ''எங்கே போவணும் சார்? இரண்டு ரூபாய் போட்டுத் தருவியா?'' என்று டாக்ஸி ஓட்டி கேட்டு மறுப்பதுபோல் புதிய வசதிப்படி ஃபோனிலேயே கேட்டு இனி மறுத்துவிட்டால் என்ன செய்வது?' என்று இப்போதே கவலைப்படத் தொடங்கிவிட்டார்!

## மந்திரியும் வருந்துகிறார்

தமிழ்நாடு அரசாங்கம் தமக்கு அளித்து வரும் பெட்ரோல் அலவன்சான ரூ. 250 போதவில்லை என்று அமைச்சர் சாதிக் பாட்சா ஒரு கூட்டத்தில் வருத்தப்பட்டிருக்கிறார். ''1967லும் 250 ரூபாய்தான்! பெட்ரோல் விலை 1967ஐக் காட்டிலும் பல மடங்கு ஏறியுள்ள இப்போதும் அதே 250 ரூபாய் தான் என்றால் என்ன செய்வது? விலைவாசி ஏற்றத்தால் அமைச்சர்களாக இருக்கும் எங்களைப் போன்றவர்களும் கஷ்டப்படுகிறோம்'' என்று அவர் கூறியிருப்பதைப் பார்க்கும்போது 'கொஞ்சம் போட்டுக் கொடு சார்!' என்று சம்பள உயர்வு கேட்பதுபோல் இருக்கிறது. பாவம்!

## கோவில் ஊழியர் புதல்வர்

சென்னையில் நடந்த ஆலய ஊழியர்கள் மகாநாட்டில் பேசும்போது முதல்வர் கருணாநிதி, ''கோயில் ஊழியர்களுக்கும் எனக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. என் தந்தை கூடத் திருவாரூருக்கு அருகிலுள்ள திருக்குவளை கோயிலில் வேலை செய்தவர்தான்'' என்று கூறி அந்த ஊழியர்களோடு சொந்தம் கொண்டாடிக் கொண்டு பேசி விட்டார். கோயில் ஊழியர்கள் வேலைநிறுத்தம் செய்தால் 'சாமி நடு வீதியில் உலா வரும்போது அப்படியே விட்டு விட்டுப் போக வேண்டி வரும்' என அவர் கூறியபோது ஊழியர்கள், 'நாங்கள் வேலைநிறுத்தம் செய்யமாட்டோம்' என முழங்கினார்களாம். அவர்களின் சில கோரிக்கைகளை முதல்வர் ஏற்றாராம். ஏதோ கோயிலின் மேலும் தெய்வத்தின் மேலும்

வெற்றி கிடைச்சுப்.... போச்சு!

இந்தியா

ஹாலந்து

உலகக் கோ(ப்பை)ட்டை!

எட்டு, ஐம்பது, பத்து,
ஐயோ! அப்பா!
அம்மா!
இந்திரா!

இந்திரா காங்கிரஸ்
அரசு

சிக்கன நடவடிக்கை!

கருணை பிறக்குமோ பிறக்காதோ, ஊழியர்கள் மேலாவது முதல்வருக்குக் கருணை பிறந்ததே? அதற்காக முதல்வருக்கு நன்றி கூறுவதா? அல்லது முதல்வரின் தந்தைக்கு நன்றி கூறுவதா ?

## நடிப்புத் திறன்

போலீஸ் உதவிக் கமிஷனர் போல் நடித்து, ஓர் அரசு அலுவலகத்தில் பணிபுரியும் ஊழியர் ஒருவரிடமிருந்து சம்பளத்தைப் பறித்துச் செல்ல முயன்ற ஒருவர் பிடிபட்டுக் கைது செய்யப்பட்டிருக்கிறார். நடித்தவருடைய போலீஸ் உடையில் சில தவறுகள் இருந்து அவரைக் காட்டிக் கொடுத்து விட்டதால் மாட்டிக் கொண்டாராம். அப்படி நடித்தவர் முன்பு போலீஸ் இன்ஸ்பெக்டர் பதவிக்கு முயன்று தேர்வு பெற முடியாமல் போனவராம். உண்மையில் கிடைக்காத பதவியை நடிப்பிலும்கூட அடைய முடியாமற் போய்விட்ட அவருக்கு நாம் அநுதாபங்களைத் தவிர வேறு எதைத்தான் தர முடியும்?

## வேதமும் தமிழகமும்

திருவல்லிக்கேணி கலாசாரக் கழகத்தின் சார்பில் நடந்த ஒரு கூட்டத்தில் பேசும் போது தமிழக கவர்னர் திரு கே. கே. ஷா, ''வேதங்கள் ஒரு குறிப்பிட்ட வகுப்பாரின் ஏகபோகச் சொத்து அல்ல, அவை அனைவருக்கும் உரியது. பாமர மக்களும்கூட வேதங்களை நன்கு புரிந்து கொள்ளும்படியாக அவற்றின் உட்பொருள் விளங்குமாறு எல்லா இந்திய மொழிகளிலும் அவற்றை வெளியிட வேண்டும். மனத்தின் துயரங்கள் தீர வேதங்களைக் கற்பது பயன்படும். பாரதியார் கூறியது போல் தமிழ்நாடு 'வேதம் நிறைந்த தமிழ் நாடு' ஆகவேண்டும்'' என்று கூறியிருக்கிறார். பயனுள்ள யோசனைகள் காரிய சித்தியாகவும் அவர் முயற்சிகள் மேற்கொள்ள வேணும்.

## ஈ. வெ. ரா.வுக்கு ஒரு கடிதம்

மதுரை ஆதீனகர்த்தர் சோமசுந்தர பரமாச்சாரிய சுவாமிகள் ஈ. வெ. ராவுக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். ''கடவுள் உண்டு என்பதை உங்களுக்கு நிரூபிக்கத் தயாராக இருக்கிறோம். அப்படி நிரூபித்தால் நீங்கள் உங்கள் கருத்துக்களை மாற்றிக் கொள்ளத் தயாராக இருக்கிறீர்களா? அவ்வாறு தயாராக இருப்பதாக நீங்கள் பேசியதைப் பத்திரிகைகளில் பார்த்தேன். நீங்கள் பேசிய பேச்சுக்களைப் பத்திரிகைகளில் பார்த்து 1969ம் வருடமே இப்படியோர் உண்மையைத் தங்களுக்கு நிரூபிக்கத் தயாரா யிருந்தேன். ஆனால் அதற்கு இதுவரை தங்களிடமிருந்து பதில் இல்லை. தாங்கள் மதுரை ஆதீனம் வருவீர்களானால் தங்களுக்குக் கடவுளை நிரூபித்து விளக்க முடியும். நான் அதற்குச் சித்தமா யிருக்கிறேன். எப்போது இங்கே வருகிறீர்கள்?'' என்று ஈ. வெ. ராவை மடத்துக்கு அழைத்துள்ளார் அவர்.

எங்கே தமது 'கடவுள் இல்லை' கொள்கையை மாற்றிக் கொள்ள நேரிட்டுவிடுமோ என்பதற்காகவே திரு ஈ. வெ. ரா. மதுரை ஆதீனகர்த்தரின் அழைப்பை ஏற்காது இருந்துவிடலாம். அவரது பிராபல்யமே அவரது கொள்கையினால்தானே!

## நல்ல தீர்மானம்

கள்ளுக்கடைகளை மூடிவிட்ட தமிழ்நாடு அரசு, முன்னர் வாக்குறுதி தந்தபடியே, சாராயக் கடைகளையும் அடுத்த ஆண்டு மூடிவிடத் தீர்மானித்துள்ளது. இந்தத் தகவலை முதல்வர் நிருபர்களிடையே தெரிவித்தார். தவறான நடவடிக்கையைப் படிப்படியாக வேனும் திருத்திக்கொள்ள முன்வந்ததற்குத் தமிழக முதல்வரைப் பாராட்ட வேண்டும்; மக்கள் கருத்துக்குத் தாமதமாகவேனும் அரசு மதிப்புக் கொடுக்கிறது என்று பலர் மகிழ்வர்.

புட்டிகளில் அடைக்கப்பட்டுச் சீட்டு ஒட்டி, பகட்டாக விளம்பரப்படுத்தி, குழாய் விளக்குப் போட்டு விநியோகிக்கப்பட்டு வரும் உயர்ரக மதுபான வகைகள்கூட, விரட்டப்படுமா என்று கேட்டதற்கு, முதல்வர் நிச்சயமாகப் பதில் கூறவில்லை. படிப்படியாக மது விலக்கை அமுல்படுத்துவதில் கடைசிப்படியாக இந்த உயர்ரக மதுக்களுக்கும் தடைவிதித்து மது அரக்கனை அடியோடு தமிழகத்தை விட்டு விரட்டிவிட வேண்டும். அதன் பின்னர் முதல்வரும் மற்றவர்களும் மனக் குறுகுறுப்புச் சிறிதும் இன்றி அண்ணா சமாதிக்குச் சென்று அஞ்சலி செலுத்தலாம்!

---

**ராஜாஜி சிந்தனை**

சாதாரணக் களிமண்ணைக் கொண்டு அழகான உருவம் அமைத்து அதை லக்ஷ்மி அல்லது துர்க்கை என்று அழைக்கிறோம். அதில் கடவுளின் அம்சம் இல்லாவிட்டால் அப்படி அழைப்போமா? பிரம்மாண்டமான இமயமலையைப் போன்றே இந்த மர்மத்தின் ஓர் அம்சமாகச் சின்னஞ் சிறு மலரும் இருக்கிறது. உலகிலுள்ள மிகப் பெரிய சின்னத்தைப் போன்றே சிறிய களிமண் பொம்மையும் அந்த மாபெரும் ரகசியத்தின் ஓர் அம்சம் ஆகும். ஆத்ம பலமும் பக்தியும்தான் நம்மைக் கடவுளிடம் கொண்டு சேர்க்கும். வழிபடும் முறைகள் யாவும் அதை நோக்கியே நம்மை அழைத்துச் செல்கின்றன. எந்த விதமாக வழிபட்டாலும் கடவுளை அடையலாம். எனவே வழிபடும் முறையில் உள்ள வேறுபாடு குறித்துச் சண்டையிடக் கூடாது என்று உபதேசித்த நமது பெரியவர்கள் அதன் மூலம் தங்கள் பரந்த ஞானத்தைப் புலப்படுத்தினார்கள்.

---

# இஷ்ட தேவதை

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

**ம**னுஷ்யர்களின் மனப்பான்மை பல தினுசாக இருக்கிறது. ஒவ்வொரு விதமான மனப்பான்மை உள்ளவர்களையும் ஆகர்ஷித்து, அவர்களைப் பக்தி செலுத்த வைத்து, அவர்களுடைய மனத்தைச் சுத்தம் செய்து, சித்தத்தை ஏகாக்ர (ஒருமை)ப் படுத்தவே பரமாத்மா பல பல தேவதா ரூபங்களாக வந்திருக்கிறது.

''இந்த ஹிந்துக்களுக்கு எத்தனை கோடி சாமிகள்!'' என்று அந்நிய மதஸ்தர்கள் நம்மைக் கேலி செய்வதுண்டு. உண்மையில் ஒன்றுக்கு மேற்பட்ட ஸ்வாமி இருப்பதாக எந்த ஹிந்துவும் எண்ணவில்லை. வைதிக சமயம் ஸ்வாமி ஒருவரே என்று கண்டது மட்டுமில்லை; இந்த ஜீவனும்கூட அதே ஸ்வாமிதான் என்று வேறெந்த மதமும் கண்டு பிடிக்காததையும் கண்டுபிடித்திருக்கிறது. எனவே பிரபஞ்ச வியாபாரத்தை நடத்துகிற மகா சக்தியாக ஒரு ஸ்வாமிதான் இருக்கிறது என்பதில் எந்த ஹிந்துவுக்கும் ஐயமில்லை. ஆனால் அந்த ஒரு ஸ்வாமி பல ரூபத்தில் வர முடியும் என்று இவன் நம்புகிறான்.

ஒரே ஸ்வாமி நம் தேசத்தின் மகாபுருஷருக்குப் பல ரூபங்களில் தரிசனம் தந்திருக்கிறார். அந்தந்த ரூபங்களுக்குரிய மந்திரம், உபாசனா மார்க்கம் எல்லாவற்றையும் அந்த மகாபுருஷர்கள் நமக்குத் தந்திருக்கிறார்கள். இவற்றை முறைப்படி அநுஷ்டித்தால் நாமும் அந்தந்தத் தேவதையின் அநுக்கிரகத்தைப் பெற முடியும். எந்தத் தேவதையாக இருந்தாலும் சரி, அது முடிவில் பரமாத்மாவே ஆகையால், நாம் சந்தேகம் கொள்ளாமல் பூரண சிரத்தையோடு பக்தி வைத்தால் அது நமக்கு சம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை தரும் — இந்த விடுதலைக்கு நாம் பக்குவப் படுவதற்கு முன் நம் லௌகிக வேண்டுதல்களைக்கூட அநுக்கிரகிக்கும்.

அவரவர் மனத்தைப் பொறுத்து ஒன்றில் பிடிமானம் கொள்வதற்கு இத்தனை தேவதைகள் இருக்கின்றன. தாயாரிடம் குழந்தை போல் பரமாத்மாவை அநுபவிக்க வேண்டும் என்கிற மனப்பான்மை உடையவனுக்கு அம்பாள் உபாசனை இருக்கிறது. ஒரே சாந்தத்தில் அழுந்திப் போக வேண்டுமென்ற மனோபாவம் உள்ளவனுக்கு தக்ஷிணாமூர்த்தி இருக்கிறார். ஆனந்தமாக ஆடிப் பாடிப் பக்தி செலுத்துவதற்குக் கிருஷ்ண பரமாத்மா இருக்கிறார். இஷ்டம் இருந்தாலும் இஷ்டம் இல்லாவிட்டாலும் ஏதோ ஒரு மகா சக்தியிடம் பக்தி செய்வது என்று இல்லாமல் நம் மனசுக்கு எப்படி இஷ்டமோ, அதற்கு அநுசரணையாகவே அந்த மகாசக்தியை ஒரு மூர்த்தியில் பாவித்து பக்தி செய்வதற்கு நம் மதத்தில் உள்ள ''இஷ்ட தேவதை'' வழிபாடு வழிவகுக்கிறது. அன்போடு உபாசிக்க வேண்டுமானால், உபாசனைக்குரிய மூர்த்தி நம் மனோபாவத்துக்குப் பிடித்தமானதாக இருந்தால்தானே முடியும்? இதனாலேயே இஷ்ட தேவதை என்று தனக்குப் பிடித்த மூர்த்தியை உபாசிக்க நமது மதம் சுதந்திரம் தருகிறது.

'ஆனால் அவரவரும் தமக்கு இஷ்டமான தேவதையை உபாசிக்கும்போதே மற்றவர்களுடைய இஷ்ட தேவதைகளைத் தாழ்வாக எண்ணக் கூடாது. நமக்கு எப்படி இந்த ரூபத்தில் பரமாத்மா அநுக்கிரகம் பண்ணுகிறாரோ அப்படியே அவர்களுக்கு இன்னொன்றின் மூலம் அநுக்கிரகம் பண்ணுகிறார் என்று தெளிவு பெறவேண்டும். 'அந்தந்தத் தேவதைக்குரிய புராணத்தைப் பார்த்தால் அது ஒன்றே ஸ்வாமி, மற்ற தேவதை எல்லாம் அதற்குக் கீழானவை, இதனிடம் அவை தோற்றுப் போயின என்றெல்லாம் இருக்கிறதே!' என்று கேட்கலாம். இதற்கு **நஹி நிந்தா** நியாயம் என்று பெயர். அதாவது இதர தேவதைகளை நிந்திப்பது பௌராணிகர்களின் நோக்கமல்ல. இந்த ஒரு தேவதையை ஆராதிப்பவருக்கு மனம் சிதறாமல் இது ஒன்றிடமே தீவிரமாகப் பற்றுதல் ஏற்படுத்த வேண்டும் என்பதே புராணத்தின் நோக்கம். இதற்காகவே இந்தத் தேவதைக்கு மட்டும் மற்றத் தேவதைக்கு இல்லாத உத்கர்ஷம்— (உயர்வு) சொல்லப்படுகிறது.

மகாநுபாவர்களாக இருந்தவர்கள் எல்லாத் தேவதைகளையும் சமமாகவே பார்த்தார்கள். மகா கவிகளான காளிதாசன், பாணன் முதலியவர்களும் ஒரே வஸ்துதான் பல மூர்த்திகளாகவும் வருகிறது என்று சந்தேகமில்லாமல் கூறுகிறார்கள்.

பக்தர்களின் மனோபாவத்தைப் பொறுத்து பரமாத்மா பல ரூபம் கொள்வதைப்போலவே பிரபஞ்சத்தில் தன்னுடைய வெவ்வேறு காரியங்களைப் பொறுத்து வெவ்வேறு ரூபம் எடுத்துக்கொள்கிறது. ரஜோ குணத்தால் சிருஷ்டி செய்யும்போது அதற்கேற்ப பிரம்மாவாகிறது; ஸத்வ குணத்தால் பரிபாலிக்கும்போது அதற்கேற்ப மகாவிஷ்ணுவாகிறது; தமோகுணத்தால் சம்ஹரிக்கும்போது அதற்குரிய முறையில் ருத்ர ரூபம் கொள்கிறது. இந்த மூன்றையே பாணனும் காளிதாசனும் ஒரே சக்தியின் மூன்று வடிவங்களாகக் குறிப்பிடுகிறார்கள். இந்த மூன்றுக்கும் பொருந்துவது முப்பத்து முக்கோடி தேவதைகளுக்கும் பொருந்தும்.

எனவே, என் தெய்வம் உசந்தது; உன் தெய்வம் தாழ்ந்தது என்று சண்டை பிடிப்பதில் அர்த்தமே இல்லை. ஆனாலும் நம் தேசத்தில் பல இஷ்ட தெய்வங்கள் இருந்தாலும் கூட, பிரதானமாக இருந்து வரும் சைவத்துக்கும், வைணவத்துக்கும் இடையே தீவிரச் சண்டை நடந்து வந்திருக்கிறது. நன்றாக ஆலோசித்துப் பார்த்தால் இந்த இரண்டும் ஒரே வஸ்துதான் என்ற ஞானம் பெறுவோம்.

**(அடுத்த இதழில் சிவ-விஷ்ணு அபேதம்)**



# பரதத்தைக் கண்டனர்; பண்பினைக் காட்டினர்!

நமது பண்பாடு, கலாசாரம், மொழி முதலியவற்றைச் சிறிதும் அறியாதவர்கள் நம் பரதநாட்டியத்தை வெகுவாக அனுபவிக்க முடியும் என்பதை ஜப்பானியர் குமாரி மீனாட்சி சபாநாயகத்துக்கு நன்றாக உணர்த்தி விட்டார்கள். ஜப்பானில் இஹாஹோ என்ற மலைவாசஸ்தலம். குமாரி மீனாட்சி சபாநாயகம் இந்த ஊரில் நடனம் ஆடினார். காண வந்தவர்களில் பெரும்பாலோர் ஜப்பானியச் சிறுமிகள். பரதநாட்டிய விருந்தைக் கண்டு அவர்கள் சொக்கிப் போய்விட்டார்கள். நடனம் முடிந்ததும் ஜப்பானியச் சிறுமிகள் ஒப்பனை அறைக்குள் வந்து மீனாட்சியைச் சூழ்ந்து கொண்டனர். ஒரு ஜப்பானியச் சிறுமி ஒட்டியாணத்தைக் கழற்றித் தாச் சொல்லி அணிந்து பார்த்து மகிழ்ந்தாள். மற்றொருத்தி கால்சலங்கையை வாங்கித் தன் காலில் அணிந்து குதித்துப் பூரித்தாள். வேறொருத்தி குமாரி மீனாட்சியின் நீண்ட கூந்தலைப் பார்த்து அதிசயித்தபடியே நின்றாள். அவள் தலையில் அணிந்திருந்த 'சவுரி'யை எடுத்ததும், 'ஆஹா! இதுவா இத்தனை நீண்ட தோற்றத்தைத் தந்தது!' என்று அதனைத் தன் கூந்தலில் வைத்துக் கண்ணாடியில் அழகு பார்த்தாள்!

ஜப்பானியச் சிறுமிகளின் மொழி புரியா விட்டாலும் அவர்களின் அன்பும் பண்புமே மீனாட்சியைத் திணற அடித்துவிட்டன. ஜப்பான் பண்பாட்டுக்குப் பெயர்போன இடமாயிற்றே! இஹாஹோ மலை வாசஸ்தலத்தை விட்டுக் குமாரி மீனாட்சி புறப்பட்டபோது அத்தனை ஜப்பானியச் சிறுமிகளும் கண்ணீர் மல்க வழியனுப்பியது மீனாட்சியின் நெஞ்சைத் தொட்டுவிட்டது!

ஜப்பானில் வாஸேட் சர்வகலாசாலையிலே தான் முதல் நடன நிகழ்ச்சிக்கு ஏற்பாடாகியிருந்தது. அவர்கள் சர்வகலாசாலையை அடைந்தபோது 750 மாணவர்கள் கொடிகளைப் பிடித்து ஆர்ப்பாட்டக் குரல் எழுப்பி, 'ஸ்டிரைக்' செய்து கொண்டிருந்தனர். முதல் நடனக் கச்சேரி 'அபசகுனம்' இல்லாமல் நடக்க வேண்டுமே என்று நடனக் குழுவினருக்கு ஒரே கவலை! மீனாட்சிக்கோ உதறல் எடுத்து விட்டது! 'முதல் கோணல் முற்றும் கோணலாகி' விடுமோ என்று!

மாலையில் எப்படியோ நடன நிகழ்ச்சி ஆரம்பமாகிவிட்டது. குமாரி மீனாட்சி பயந்து கொண்டே அரங்கில் ஆட முன்வந்தாள். என்ன அதிசயம்! கொடி பிடித்து ஆர்ப்பாட்டம் செய்த அத்தனை மாணவர்களும் எந்தவித சப்தமுமின்றி மீனாட்சியின் நடனத்தை ரசிப்பதில் மூழ்கியிருந்தனர். ஆர்ப்பாட்டம் வேறு, நடனத்தை ரசித்துக் கைதட்டுவது வேறு; ஒன்றுக்கு ஒன்று முடிச்சுப் போடக் கூடாது; நமது பிரச்னைகள் விருந்தோம்பலுக்குத் தடையாக இருக்கக் கூடாது என்பதை அவர்கள் நன்றாக உணர்ந்திருந்தனர். இதைப் பார்த்ததும் மீனாட்சிக்கு உற்சாகம் பொங்கக் கேட்பானேன்! முதல் கோணல் முற்றும் கோணல் என்பதற்குப் பதில் முதல் சிறப்பு முற்றிலும் சிறப்பு என்றாகிவிட்டது! இந்திய நடனக் கலையைக் கற்றுணர்ந்த சனாகிபாரா அறிவிப்பாளராக இருந்து குமாரி மீனாட்சியின்





இடது: ஜப்பானிய ரசிகர்களுக்கிடையில் குமாரி மீனாட்சி.

மேலே: இந்தியத் தூதர் திருவேங்கடத்தான் தம்பதி, ஜப்பானியத் தூதர் தம்பதி ஆகியோருக்கிடையில்.

பரதநாட்டியத்தை ஜப்பானியர்கள் ரஸிப்பதற்குத் துணை புரிந்தார்.

ஜப்பானில் மிட்ஸுபி டிபார்ட்மெண்டல் ஸ்டோரின் கலை அரங்கில் ஒரு நடன நிகழ்ச்சி இருந்தது. நடன விருந்துக்குப் பிறகு பத்திரிகையாளரும் பிரமுகர்களும் நடனமாடிய குமாரி மீனாட்சியைச் சூழ்ந்து கொண்டனர்.

டிபார்ட்மெண்டல் ஸ்டோரின் தலைவர் குமாரி மீனாட்சியிடம், "உனக்கு இந்தியா பிடிக்கிறதா? ஜப்பான் பிடிக்கிறதா?" என்று ஆவலுடன் வினவினார்.

"எனக்குத் தாய்நாடான இந்தியாவே பிடிக்கிறது!" என்ற வெளிப்படையான பதில் குமாரி மீனாட்சியிடமிருந்து வந்தது.

"பார்த்தீர்களா? உங்கள் மகளுக்கு ஜப்பான் பிடிக்கவில்லையாம். இந்தியா தான் பிடிக்கிறதாம்!" என்று கலங்கிய குரலில் மீனாட்சியின் அன்னையிடம் புகார் செய்தார், டிபார்ட்மெண்டல் ஸ்டோர் தலைவர்.

குமாரி மீனாட்சியின் அன்னை சமாதான வார்த்தைகள் சொல்லிச் சமாளிப்பதற்குள், "நீங்கள் இந்தியாவுக்கு வந்து உங்களிடம் நான் இப்படி ஒரு சிக்கலான கேள்வியைக் கேட்டால் நீங்கள் என்ன பதில் சொல்வீர்கள்?" என்று மடக்கினார் மீனாட்சி. மடக்கு அல்லவா?

ஹாங்காங், பல நாட்டினரும் பல இனத்தவரும் ஒப்புறவுடன் வாழும் நகரம். இந்தச் சுறுசுறுப்பு நகரில் இந்தியக் கழகம், கேரளசமாஜம் ஆகியவற்றின் ஆதரவில் குமாரி மீனாட்சியின் நடன நிகழ்ச்சிகள் நடந்தன.

"நாங்கள் தாய்நாட்டை விட்டு வெகு தூரம் வந்துவிட்டோம். நாங்கள் தாய்நாட்டுப் பாட்டைக் கேட்டு நடனத்தைப் பார்த்துப் பல யுகங்கள் ஆனாற்போல் இருக்கிறது. உங்கள் விஜயம் ஓர் அரிய வாய்ப்பு!" என்றனர் உருக்கமாக. தாய்லாந்து, மலேஷியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்கும் நடனக் குழுவினர் சென்றிருந்தனர்.

குமாரி மீனாட்சியின் தாயாரைச் சிங்கப்பூரில் கவர்ந்த விஷயம் மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில்.

தாய்நாடு திரும்பி, காஞ்சிப் பெரியவர்களிடம் சிங்கப்பூர் கோயில்களின் நேர்த்தியைச் சொன்ன பிறகுதான் குமாரி மீனாட்சியின் அன்னைக்குத் திருப்தி ஏற்பட்டது.

தமிழ்நாடு பிரதம காரியதரிசி திரு சபாநாயகம் அவர்களின் புதல்வி மீனாட்சி, எத்திராஜ் கல்லூரியில் பி. ஏ. சரித்திர மாணவி. கர்நாடக சங்கீதம் முறைப்படி கற்றுக் கொண்டிருக்கிறார். விளையாட்டுக் கலைகளிலும் ஈடுபாடு மிக்கவர். பரோடாவுக்குச் சென்ற சென்னை சர்வகலாசாலை கூடைப்பந்தாட்டக் கோஷ்டியில் இவரும் சென்று ஆடியிருக்கிறார். டேபிள் டென்னிஸ், பூப்பந்தாட்டம் ஆகியவற்றிலும் வல்லுநர். எத்திராஜ் கல்லூரிப் பேச்சுப் போட்டிகளில் கலந்து கொண்டு பரிமளிப்பவர். பரதநாட்டியத்தைப் 'பந்தநல்லூர் பாணி'யில் கற்று ஆடி வருபவர். இவரது குரு பந்தநல்லூர் சுப்பராய பிள்ளை. திருச்சூர் ராமநாதனிடம் கேரளத்தின் 'மோஹினி' ஆட்டக் கலையையும் கற்றுணர்ந்திருக்கிறார்.

கிழக்கத்திய நாடுகளுக்குக் கலைப் படையெடுப்புச் செய்த குமாரி மீனாட்சி, மொத்தம் இருபது பரதநாட்டிய நிகழ்ச்சிகளை நடத்திவிட்டு வெற்றியோடு தாயகம் திரும்பியிருக்கிறார்.

ஜப்பானியர்களுக்குக் குமாரி மீனாட்சி 'அமெச்சூ'ராக இருந்தும் தொழில் முறையினரைப்போல் நடனக் கலையில் அவ்வளவு சிரத்தை காட்டுவதில் வியப்பு. 'பெற்றோர் நிச்சயிக்கும் கணவனையே திருமணம் செய்து கொள்வேன்' என்று கூறியதைக் கேட்டு ஒரே ஆச்சரியம். இப்படி அயல்நாட்டுக்காரர்களை அதிசயத்தில் மூழ்கடித்துவிட்டு வந்த குமாரி மீனாட்சி இவ்விதழ் அட்டைப் படத்தில் இடம் பெறுவதில் அதிசயம் ஒன்றுமில்லையல்லவா?

— பேட்டி: பி. எஸ். எம்.



'போலிமி' ஆடைகளுக்கும் வஸந்தகாலத்திற்கும்
ஒருவித சம்பந்தமும் இல்லையென நீங்கள் நினைத்தால்
அது "போலிமி" ஆடைகளை வெகுவாக விரும்புவோருக்கு
பெருத்த ஆச்சரியத்தைத்தான் அளிக்கும்.



SKYLARK

போலிமி பிரியர்களின்
மனதை வெகுவாகக் கவருவது
நைலான்-ஜார்ஜெட்,
நைலான்-கிரிம்பு-ஜார்ஜெட்,
ரேயான் ஜார்ஜெட்,
ரேயான்-கிரேப் ரகங்களில் உள்ள
போலிமி புடவைகள்.

போலிமி புடவையை அணியும்
பொழுது வஸந்தகாலத்தின்
நடுவில் குதூகலத்துடன் இருப்ப
தாகவே காணப்படுவீர்கள்.



தி பாம்பே
ஸில்க் மில்ஸ் லிட்.
இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், லால்பாக், பம்பாய் 400012

ஏஜெண்டுகள் :

மெஸர்ஸ் G. I. மீர்பூர், 137, பீமசேனு கார்டன் ரோடு, சென்னை-4
மெஸர்ஸ் KN. பரமசிவன், 108, தெற்கு ஆவணி மூல வீதி, மதுரை-1
மெஸர்ஸ் ரமண்லால் D. ஷா, 11-25 15, கொத்தபேட், விஜயவாடா-1

# ராஜாஜியின் ஜெயில் டைரி

ஆசிரியர் அனுதாபமின்றி எழுதிய போதிலும் மகம்மது நபியின் குண விசேஷங்கள் இந்நூலில் வெகு தெளிவாகக் காணப்படவே செய்கின்றன. இயற்கையில் மிகத் தாராள குணமுடையவர். மத வெறி இல்லாதவர். நேர்மைக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமானவர் என்று சகல மக்களாலும் பாராட்டப் பெற்றவர். அதிகாரம் கிடைத்தபோது அரைக்கணமும் சும்மா இராமல் ஜனங்கள் நன்மைக்காகப் பாடுபட்டவர். தாம் நிறுவிய ஜன சமூகத்தின் உள் நாட்டு விவகாரங்களையும் வெளிநாட்டு விவகாரங்களையும் ஒருங்கே கண்காணித்து வந்தார். எப்பொழுதும் புன்னகை தவழும் முகம். எத்தனையோ உறவினர்கள் இருந்தபோதிலும் கொஞ்சம் கூட நெறி தவறித் தயவு காட்டாதவர். நியாயம் வழங்கும் விஷயத்தில், ஆவர்கள் தலையிடச் சம்மதியாதவர். தம்முடைய குடிசையில் உட்கார்ந்து கொண்டு விசிறியைக் கையில் வைத்துக் கொண்டு கிரீடங்களை எடுக்கவும் கொடுக்கவும் செய்து கொண்டிருந்தார். எந்த அற்பக் காரியத்துக்கும் யாரும் அவரிடம் போய் முறையிட்டுக் கொள்ளலாம்.

அவரே சேனாதிபதியாகவும், சட்டம் இயற்றுபவராகவும், நியாயாதிபதியாகவும், ராஜதந்திரியாகவும் இருந்தார். இது போதாதென்று மத போதகாசிரியரும் அவரேதான். தண்டிக்க வேண்டியிருந்தாலும் மிகக் குறைந்த தண்டனைகளையே விதிப்பார். அங்கஹீனம் செய்வதையும், சித்திரவதை செய்வதையும் அறவே நிறுத்தி விட்டார். ஏழாவது நூற்றாண்டிலேயே அவர் குற்றவாளிகளைக் கொளுத்துவதை நிறுத்தி விட்டார். ஆனால் கிறிஸ்துவ தேசங்களிலோ அந்த வழக்கத்தைப் பத்தொன்பதாவது நூற்றாண்டில்கூட அனுஷ்டித்து வந்தார்கள். அவர் அன்பு காட்டியது மக்களிடம் மட்டுமன்று, மிருகங்களிடமும் அன்பு காட்டினார். பறவைகளைக் கொல்லக் கூடாது என்றும், ஒட்டகங்களைத் துன்புறுத்தக் கூடாது என்றும் உத்தரவிட்டார். குதிரைகளின் வால்களை வெட்டுவதையும் தடுத்தார். ஒரு சமயம் அவருடைய பணியாட்கள் சிலர் எறும்புப் புற்று ஒன்றில் தீ வைத்தனர். அதை அறிந்ததும் தீயை அணைக்குமாறு பணித்தார். மூட நம்பிக்கைகள் காரணமாக நடந்து வந்த கொடுஞ்செயல்களையெல்லாம் அடியோடு ஒழித்தார்.

பெண்களுக்காக அவர் செய்த நன்மைகள் அனந்தம். கைது செய்யப்பட்டவர்களுக்கும், அடிமைகளுக்கும் அநேக நன்மையான விதிகள் அமைத்தார்.



உதாரணமாகத் தாயையும் குழந்தையையும் பிரிப்பதையும், சகோதரர்களைப் பிரிப்பதையும் நிறுத்தினார். கொலைக்குப் பதில் கொலை செய்யும் வழக்கத்தை ஒழித்தார். எஜமான்களைப் போலவே அடிமைகளும் உணவும் உடையும் பெற வேண்டும் எனக் கட்டளை பிறப்பித்தார். வாரிசு பாத்தியதை சம்பந்தமாக அவர் செய்த விதிகளை இப்பொழுதுகூடப் பெரிய சட்ட நிபுணர்கள் சரியானவை என்று ஏற்றுக் கொள்ளுகிறார்கள். இவ்வளவு பெரிய வேலைகளையெல்லாம் அவர் வெகு சில வருஷ காலத்திலேயே செய்து முடித்தார். அது மட்டுமன்று. அவர் செய்த சீர்திருத்தங்கள் எல்லாம் அவர் இறந்ததும் மறைந்து போய்விடவில்லை. அதிகமாக அபிவிருத்தியடையவே செய்தன. அவ்வளவு உறுதியானதாக இருந்தது, அவர் போட்ட அஸ்திவாரம்.



**எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட்**

# தோற்றத்தில் எளியவர்; பதவியில் உயர்ந்தவர்!

சட்டம் படித்து அதன் இட்டத்தில் அதிகம் நெருங்காமல் சமூகப் பணிக்கே தம்மை அர்ப்பணம் செய்து கொண்ட என் மாமனார் திருவாளர் ராதாகிருஷ்ண பிள்ளைதான் எங்கள்வீட்டுப்பிரசிடெண்ட்! அந்த நாள் 'மேயர் ராதாகிருஷ்ண பிள்ளை' என்று சொன்னால் உங்களுக்குச் சட்டென்று புரியலாம்! 1944—45ல் சென்னை மாநகராட்சியின் மேயராகப் பணியாற்றும் வாய்ப்பைப் பெற்றவர்.

அறுபத்தைந்து வயதைத் தாண்டியும், இன்றைக்கும் என் மகனுக்கு இணையாகக் குழந்தை போலக் குதூகலமாகவும் சுறுசுறுப்பாகவும் இருக்கும் அவருடைய தன்மைக்குப் போட்டி போட யாராலும் முடியாது.

வீட்டு வேலைகளின் மொத்த மேற்பார்வையும் அவரிடம்தான்! மாட்டு வேலை, தோட்ட வேலை எல்லாம் உள்பட! வீட்டிலே அங்கேயும் இங்கேயும் பம்பரமாகச் சுற்றிக் கொண்டிருப்பார்! ''உஷ்!.... ஹா...!'' என்ற பெருமூச்சையோ அங்கலாய்ப்பையோ நாங்கள் அவ[illegible] கேட்டதே யில்லை.

''வேலைக்காரர்கள் பார்த்துக் கொள்ள மாட்டார்களா?'' என்றால் ''கூட நானும் பார்க்கிறேனே!'' என்று பதில் சொல்லி எங்களை அடக்கி விடுவார். வேலைக்காரர்களிடம் இவருக்கு ரொம்ப நல்ல பெயர். முதலாவது அவர்களைப் பலமாகக் கண்டிக்க மாட்டார். இரண்டாவது அவர்களை அதிகம் வேலை செய்ய விடமாட்டார்.

ஏன்? கழைக்கூத்தாடி, பெருமாள் மாட்டுக்காரன், பொய்க்கால் குதிரை ஆசாமி இவர்கள் எல்லோரும் கூடத்தான், எங்கள் வீட்டுப் பிரசிடெண்டுக்கு 'நல்ல மனிதர்' என்று சர்டிபிகேட் கொடுத்து விட்டுப் போவார்கள். காரணம் தெரியுமா? இவர்களைக் கண்டவுடன், தம் பேத்திகளையும் வாசலுக்கு அழைத்துக் கொண்டு போய், அவர்களைக் காட்டி அவர்கள் கலையை ரசித்து, அவர்களுக்குத் தாராளமாகச் சன்மானமும் அளித்துவிடுவார்.

நடை உடை பாவனைகளிலும் சரி, பழக்கத்திலும் சரி, இவர் எளிமையானவர். அசல் காந்தீயவாதி. இந்த எளிய சுபாவத்தால் நேர்ந்த ஒரு தமாஷான சம்பவத்தை இவர் அடிக்கடி நினைவுபடுத்திக் கொண்டு சிரிப்பார்.

இவர் 'மேயர்' பதவி வகித்த காலத்தில் திருவனந்தபுரத்தில் மேயர்கள் மகாநாடு ஒன்றுக்கு ஏற்பாடாகியிருந்ததாம். அதற்கு ரயிலில் இவர் புறப்பட்டுச் சென்றார். எப்படிப் போனார் தெரியுமோ? தம்முடைய ஆட்படைகள், டவாலிகள், டபேதார்கள், யாருமில்லாமல் தனியாகவே புறப்பட்டுவிட்டார்.

செங்கோட்டை ரயில் நிலையத்தில் இவரைச் சந்திக்க வந்திருந்த உள்ளூர்ப் பிரமுகரான உறவினர் ஒருவர், ''இதென்னது? நீங்க இப்படி ஒத்தை ஆளாய்ப் போய்த் திருவனந்தபுரத்தில் நின்றால் அப்புறம் என்ன மதிப்பு? மேயருடைய அந்தஸ்து என்ன? குறைந்த பட்சம் வில்லை மாட்டிய டபேதாராவது பின்னால் அடையாளத்துக்கு நிற்க வேண்டாமா? நீங்கள் 'இங்கே இறங்கிக் கொண்டு உடனடியாகச் சென்னைக்குத் தந்தி அடித்து டபேதாரை வரவழையுங்கள். இங்கிருந்தாவது நீங்கள் இருவரும் சேர்ந்து திருவனந்தபுரம் போகலாம். மகாநாட்டுக்கு இன்னும் நாட்கள் இருக்கின்றன'' என்று வற்புறுத்தி, இவரை ரயிலிலிருந்து இறக்கித் தம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டார். உடனே சென்னை நகராட்சிக்குத் தந்தியும் பறந்தது.

டபேதார் செங்கோட்டைக்கு வந்து சேருவார் என்று இரண்டு நாட்கள் என் மாமனார் செங்கோட்டையில் காத்திருக்க, தந்தியைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல், சென்னையை விட்டுக் கிளம்பிய அந்த ஆசாமி நேராகத் திருவனந்தபுரம் போய்ச் சேர்ந்து மேயரைத் தேடக் கடைசியில் இருவரும் எப்படியோ திருவனந்தபுரத்தில் சந்தித்து, திரும்பும்போது மட்டும் மேயர் 'ஹோதா'வுடன் வந்திருக்கிறார்!



நிறையப் பிரயாணங்களை மேற்கொண்டிருக்கிறார். பிரயாணங்கள் அநேகமாக க்ஷேத்திராடனங்கள் கலந்ததாக இருக்கும். பிரயாண அனுபவங்களை விளக்காது யாத்திரை ஸ்தலங்களைப் பற்றி இவர் பல நூல்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார். கம்பராமாயணத்தில் இவருக்கு நிறைய ஈடுபாடு உண்டு.

நினைவில் தெய்வ பக்தி தேங்கி நிற்பதுபோல் இவர் செயலிலும் அந்தப் பக்தி மேலோங்கி நிற்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமானால் நவராத்திரி சமயத்தில் நீங்கள் எங்கள் வீட்டுக்கு வந்து பார்க்க வேண்டும். வெவ்வேறு சந்தர்ப்பங்களில் இவர் விதம்விதமாகத் தேடிச் சேகரித்து வைத்திருக்கும் ராமாயண செட் பொம்மைகள் அநேகமாக ஒவ்வொரு படியையும் அலங்கரித்துக் கொண்டிருக்கும். இவைகளைத் தவிர ஒவ்வொரு நாளும் பெருமாளுக்கு விசேஷ அலங்காரம் செய்து, கொலுப் படிகளின் மத்தியில் வெவ்வேறு வாகனங்களில் அமர்த்தி, காஞ்சிபுரம், ஸ்ரீரங்கம், திருப்பதி சூழ்நிலைகளைச் சிறிய அளவில் எங்கள் வீட்டில் கொண்டு வந்து விடுவார்.

ஸ்ரீ ஜயந்தியையும் இவர் சும்மா விடுவாரா? தவழும் கிருஷ்ணன், தொட்டில் கிருஷ்ணன், காளிங்க நர்த்தனம் என்று அமர்க்களப்படுத்தி விடுவார்! சொல்ல மறந்து விட்டேனே! இவர் வைஷ்ணவ மகாசபைக்கும் பிரசிடெண்ட்!

சிறு வயதில் இவர் எவ்வளவு தூரம் கிரிக்கெட் ஆட்டத்தில் கவனம் செலுத்தினாரோ, அந்த வேகம், இன்றும் ஆட்டம் பார்ப்பதிலும், கிரிக்கெட் ஆட்டம் பற்றிய நேர்முக வர்ணனையை ரேடியோவில் கேட்பதிலும் இவரிடம் இருக்கிறது. நகரில் நடக்கும் எந்த கிரிக்கெட் டெஸ்ட் ஆட்டத்தையும் இவர் பார்க்காமல் இருக்க மாட்டார்!

வேகத்தை இவர் அதிகம் விரும்பாத சந்தர்ப்பம் காரில் போகும்போதுதான்! எப்போதும் டிரைவருக்குப் பக்கத்தில் முன் பகுதியில் உட்கார்ந்து கொள்வார். 'மெதுவாகப் போ! மெதுவாகப் போ!' என்று எச்சரித்துக் கொண்டே இருப்பார். சில சமயங்களில் அதே டிரைவரை உற்சாகப் படுத்தவும் செய்வார். அதாவது அவர் ஓய்வாக இருக்கும் நேரத்தில் அவருக்கு நல்ல புஸ்தகங்களை எடுத்துக் கொடுத்துப் படிக்கச் சொல்வார்!

தோட்ட வேலையில் சில சமயங்களில் 'துக்ளக்'காகவும் மாறிவிடுவார். ''மல்லிகைச் செடி, அங்கு சரியாக வரவில்லை. இங்கே எடுத்து மாற்றுகிறேன். ஜாதிச் செடி இங்கிருந்து அங்கே போக வேண்டும். பூச்சி அரிக்கிறது'' என்று ஏதாவது செய்வார்.

இவருக்கு எப்போதாவது உடம்பு சற்று அசௌகரியமாக இருந்தால் எங்கள் குடும்ப டாக்டர் இவரைப் பார்க்க வருவார். டாக்டரை இவர் பேசவிட மாட்டார். தம் உடல் அசௌகரியங்களைத் தாமே சொல்லி, இன்னின்ன மருந்து சாப்பிட்டால் சௌகரியமாகிவிடும் என்று இவரே டாக்டரிடம் சொல்லி அவரை அனுப்பி விடுவார்!

கண்ணன் படத்துக்குப் பூத்தொடுத்துச் சூட்டுவதிலிருந்து கறிகாய்க்காரனிடம் பேரம் செய்து வாங்குவது வரை எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட் சுறுசுறுப்புடன் எங்கும் வியாபித்திருப்பார்!



பிரசிடெண்ட்: **எம். ராதாகிருஷ்ண பிள்ளை,**
பி. ஏ., பி. எல். (முன்னாள் மேயர்)

பேட்டியளித்தவர்: **மேற்படியாரின் மருமகள்**
**ஸ்ரீமதி ராஜலட்சுமி கோபாலகிருஷ்ணன்**

பேட்டி:
**கோமதி ஸ்வாமிநாதன்**

# சிவகாமியின் சபதம்

### பதின்மூன்றாம் அத்தியாயம்

## அமர சிருஷ்டி

புத்தபிக்ஷுவின் குரலைக் கேட்டதும் திரும்பிப் பார்த்த ஆயனர், விரைந்தெழுந்து, ''வாருங்கள்! அடிகளே! வாருங்கள்!'' என்று கூறிக் கொண்டே வாசற்படியண்டை சென்றார்.

சிவகாமி அவசரமாக எழுந்து அருகிலிருந்த தூணைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

உள்ளே பிரவேசித்த பிக்ஷு நாற்புறமும் சுற்றிப் பார்த்துவிட்டு ''ஆயனரே! நான் சென்ற தடவை வந்து போன பின்னர், புதிய சிலைகள் செய்திருக்கிறீர்களோ?'' என்றார்.

''ஆம், ஸ்வாமி! அப்புறம் பன்னிரண்டு ஹஸ்த வகைகளை அமைத்திருக்கிறேன். இதோ பாருங்கள்! இந்தச் சிலைகளெல்லாம் புதியவை!'' என்றார் ஆயனர்.

பிக்ஷு ஆயனர் காட்டிய சிலைகளைக் கண்ணோட்டமாய்ப் பார்த்துவிட்டு, தூணைப் பிடித்துக் கொண்டு நின்ற சிவகாமியை நோக்கியபடி, ''அதோ அந்தத் தூணின் அருகில் நிற்பதும்



அமரர் கல்கி

சிலைதானோ?" என்று வினவினார். அப்போது புத்த பிக்ஷுவின் கடூர முகத்தில் தோன்றிய புன்னகை அந்த முகத்தின் விகாரத்தை அதிகமாக்கிற்று.

ஆயனர் சிரித்துக் கொண்டே, "இல்லை, சுவாமி! அவள் என் பெண் சிவகாமி!.... குழந்தாய்! இதோ நாக நந்தி அடிகள் வந்திருக்கிறார், பார்! பிக்ஷுவுக்கு வந்தனம் செய்!" என்றார்.

சிவகாமி அச்சமயம், நாகநந்திக்குப் பின்னால் வந்த இளைஞனைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆயனர் கூறியதைக் கேட்டதும் பிக்ஷுவின் பக்கம் திரும்பி நமஸ்கரித்தாள்.

* * *

பிக்ஷுவுடன் உள்ளே பிரவேசித்த பரஞ்சோதி அந்தச் சிற்ப மண்டபத்தில் நாற்புறமும் காணப்பட்ட அதிசயங்களைப் பார்த்தவண்ணம் வாசற்படிக்கு அருகிலேயே பிரமித்துப் போய் நின்றான். அம்மாதிரியான அபூர்வ வேலைப்பாடு அமைந்த சிற்பங்களையும் சித்திரங்களையும் அவன் அதற்கு முன்னால் பார்த்ததே இல்லை.

இடையிடையே அவன் ஆயனர், சிவகாமி இவர்களையும் கவனித்தான். அன்று பல்லக்கில் அமர்ந்திருந்தவர்கள் மத யானையின் கோபத்திலிருந்து தன்னால் காப்பாற்றப்பட்டவர்கள்—அவர்கள்தான் என்பதைத் தெரிந்து கொண்டான்.

புத்த பிக்ஷுவை ஆர்வத்துடன் வரவேற்று அவருடன் பேசிக் கொண்டே சென்ற ஆயனர் பரஞ்சோதியைக் கவனிக்கவே இல்லை; அவனைத் திரும்பிப் பார்க்கக்கூட இல்லை.

ஆனால், தூண் அருகில் நின்ற அவருடைய மகள் அவ்வப்போது தன்னைக் கடைக் கண்ணால் கவனிப்பதைப் பரஞ்சோதி தெரிந்து கொண்டான். நடனத்துக்குரிய ஆடை ஆபரணங்களை அணிந்து நின்ற சிவகாமியின் நவயௌவன சௌந்தரியத்தின் ஒளி பரஞ்சோதியின் கண்களைக் கூசச் செய்தது.

கிராமாந்தரத்தில் பிறந்து வளர்ந்தவனும், இயற்கையில் சங்கோசமுடையவனும், தாயைத் தவிர வேறு பெண்களுடன் பழகி அறியாதவனுமான பரஞ்சோதியினால் சிவகாமியின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. அதிலும், சிவகாமி தன்னைக் கவனிக்கிறாள் என்பதை அவன் அறிந்தபின்னர், அவர்கள் இருந்த பக்கமே திரும்பாமல் எதிர்ப்புறத்தில் காணப்பட்ட சில சிலைகளைப் பார்த்தவண்ணம் நின்று கொண்டிருந்தான். அந்தச் சிலைகளின் தோற்றத்திலும், முக பாவத்திலும் ஏதோ ஓர் அதிசயம் இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அந்த அதிசயம் இன்னதென்பது மின்வெட்டைப்போல் அவன் உள்ளத்தில் உதித்தது. ஆ! இந்தச் சிலைகள் எல்லாம் தூண் அருகில் நின்று தன்னைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டிருக்கும் பெண்ணின் பல்வேறு தோற்றங்கள்தாம்! இந்த உண்மையை அவன் உள்ளம் கண்டதும், சிவகாமியிடம் அவனுக்குத் தெய்வங்களிடம் உண்டாவதுபோன்ற பயபக்தி உண்டாயிற்று.

* * *

சிவகாமி புத்த பிக்ஷுவை நமஸ்கரித்த போது அவர் ஆர்வம் ததும்பிய விழிகளால் அவளை விழுங்குபவர்போல் பார்த்துவிட்டு, "புத்த தேவர் அருளால் உன் கோரிக்கை நிறைவேறட்டும், அம்மா! புத்த பிக்ஷுணி ஆக விரும்புவதாகச் சற்று முன்னால் நீதானே சொல்லிக் கொண்டிருந்தாய்?" என்றார்.

இந்த ஆசிமொழியானது சிவகாமிக்கு அருவருப்பை உண்டாக்கியது என்று அவள் முக பாவத்தில் தெரிந்தது. ஆயனருக்கும் அது பிடிக்கவில்லை என்பது அவருடைய வார்த்தைகளில் வெளியாயிற்று.

"அடிகளே! குழந்தை ஏதோ வேடிக்கையாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். நாலு நாட்களுக்கு முன்னால் காஞ்சியில் சிவகாமியின் அரங்கேற்றம் நடந்தது. ஆகா! தாங்கள் அதற்கு இல்லாமல் போய்விட்டீர்களே!" என்றார் ஆயனர்.

"எல்லாம் கேள்விப்பட்டேன். அரங்கேற்றம் — அதற்குப் பின்னால் நடந்தவை எல்லாம் அறிந்து கொண்டேன். உங்களுக்குப் பெரிய ஆபத்து வந்ததாமே? மத யானையின் கோபத்துக்குத் தப்பினீர்களாமே?" என்றார் புத்தபிக்ஷு.



''ஆம், சுவாமி! ஏதோ தெய்வத்தின் அருள் இருந்தபடியால் தப்பிப் பிழைத்தோம்.... தங்களுக்குச் சாவகாசம்தானே? இன்று பிக்ஷையை இங்கேயே வைத்துக்கொள்ள வேண்டும்'' என்று கூறி, ஆயனர் பிக்ஷுவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

''ஆகா! எனக்குச் சாவகாசந்தான். இன்றைக்குத் தங்கள் கிருஹத்திலே பிக்ஷை என்று எண்ணிக் கொண்டுதான் வந்தேன். தங்களுக்கு அதிகச் சிரமம் இல்லாவிட்டால்.....?'' என்று பிக்ஷு கூறுவதற்குள், ''சிரமமா? என்னுடைய பாக்கியம்!'' என்றார் ஆயனர்.

முற்றத்தில் கிடந்த இரண்டு பெரிய கற்களில் இருவரும் எதிர் எதிராக அமர்ந்தார்கள்.

''அம்மா, சிவகாமி! நீயும் உட்காரலாமே? அடிகளுக்குக் கலைகளில் அபாரப் பிரேமை. தெரியுமோ, இல்லையோ?''



என்று ஆயனர் கூறிவிட்டு, பிக்ஷுவைப் பார்த்துச் சற்று மெதுவான குரலில், ''அடிகளே! அஜந்தாச் சித்திரங்களைப் பற்றி ஏதாவது தகவல் வந்ததா?'' என்று கேட்டார். அப்போது அவருடைய முகத்தில் அளவிடக் கூடாத ஆர்வம் தோன்றியது.

ஆயனர் உட்காரச் சொல்லியும் சிவகாமி உட்காரவில்லை. தூணைப் பிடித்துக் கொண்டே நின்றாள். அவளுடைய கவனம் இவர்களுடைய பேச்சில் இருந்த போதிலும், இடையிடையே கண்கள் பரஞ்சோதியையும் கவனித்தன.

புத்தபிக்ஷு ஆயனரின் கேள்விகளுக்கு மறுமொழி சொல்லாமல், ''ஆயனரே! தெய்வத்தின் சிருஷ்டியைக் காட்டிலும் தங்களுடைய சிருஷ்டியே மேல் என்று எனக்குத் தோன்றுகிறது!'' என்றார்.

''சுவாமி!......'' என்று ஆயனர் மறுமொழி சொல்ல ஆரம்பித்தபோது, பிக்ஷு அதற்கு இடங் கொடாமல் தொடர்ந்து சொன்னார்: ''நான் முகஸ்துதி செய்யவில்லை, ஆயனரே! உண்மையாகச் சொல்லுகிறேன். தெய்வத்தின் சிருஷ்டி அழிந்து போகக் கூடியது. இந்த மனித உடம்புக்கு நூறு வயதுக்கு மேல் கிடையாது. நரை, திரை, மூப்புத் துன்பங்கள் மனித தேகத்துக்கு உண்டு. ஆனால், நீர் அமைத்திருக்கிறீரே, இந்த அற்புதச் சிலைகள், இவற்றுக்கு அழிவே இல்லை அல்லவா? நரை, திரை, மூப்புத் துன்பம் இந்தச் சிலைகளை அணுகாவல்லவா? கல்லால் அமைத்த இந்தச் சிலைகளில் விளங்கும் ஜீவகளை ஆயிரம் ஆயிரம் வருஷங்கள் ஆனபோதிலும் மங்காமல் பிரகாசிக்கும் அல்லவா? உம்முடைய சிருஷ்டி தெய்வ சிருஷ்டியைக் காட்டிலும் மேல் என்பதில் சந்தேகம் என்ன?''

இதையெல்லாம் கேட்ட ஆயனச் சிற்பியின் முகத்தில் கலை ஞானத்தின் கர்வம் தாண்டவமாடியது.

''அடிகளே! தாங்கள் சொல்லும் பெருமையெல்லாம் சிவகாமிக்கே சேரும். நடனக் கலையில் அவள் இவ்வளவு அற்புதத் தேர்ச்சி அடைந்திராவிட்டால், இந்தச் சிலை வடிவங்களை நான் எப்படி அமைத்திருக்க முடியும்?.. ஆஹா! குழந்தையின் அரங்கேற்றத்துக்கு நீங்கள் இல்லாமல் போய்விட்டீர்களே! ருத்ராச்சாரியார் பிரமித்து ஸ்தம்பித்து நின்று விட்டார். அன்றைக்கு இரண்டு பேர் இல்லாமல் போனதினாலேதான் எனக்கு வருத்தம். தாங்களும் இல்லை; நாவுக்கரசர் பெருமானும் இல்லை.....''

''ஆமாம், ஆமாம்! ஆயனரே! நாவுக்கரசர் சிவகாமியின் அரங்கேற்றத்தின்போது இருந்திருந்தால் ரொம்பவும் குதூகலமடைந்திருப்பார். முக்கியமாக, சக்கரவர்த்தியின் '**மத்தவிலாஸ**'த்திலிருந்து எடுத்து அபிநயம் செய்த கட்டத்தை ரொம்பவும் ரஸித்திருப்பார் நாவுக்கரசர். மதுபானம் செய்த புத்தபிக்ஷுவும் காபாலிகனும் சண்டையிட்ட இடம் வெகு ரஸமாக இருந்திருக்குமே!''

ஆயனரின் முகம் சிறிது சுருங்கிற்று. ''சுவாமி! ஹாஸ்ய ரஸத்தைக் காட்டுவதற்காக அந்த விஷயத்தைச் சிவகாமி எடுத்துக் கொண்டாள். மற்றப்படி அவளுக்கு மகான்களாகிய புத்த

பிக்ஷுக்களைப் பரிகசிக்கும் எண்ணம் கொஞ்சமும் இல்லை!'' என்றார்.

* * *

மகா ரஸிகரும் சகல கலைகளிலும் வல்லவருமான மகேந்திர வர்ம சக்கரவர்த்தி ஜைனராயிருந்தபோது, 'மத்த விலாஸம்' என்னும் ஹாஸ்ய நாடகத்தை இயற்றியிருந்தார். அதில் காபாலிகர்களும் புத்த பிக்ஷுக்களும் பெரும் கேலிக்கு உள்ளாக்கப்பட்டிருந்தார்கள். அந்த நாடகத்தில் ஒரு பகுதியைச் சிவகாமி அபிநயத்துக்கு விஷயமாக எடுத்துக் கொண்டிருந்தாள். அதைக் குறித்துத்தான் மேற்கண்ட பேச்சு நடந்தது. பின்னர் பிக்ஷு சொன்னார் :

''வாஸ்தவந்தான்; ஹாஸ்யரஸத்தை அபிநயித்துக் காட்ட மிகவும் பொருத்தமான சம்பவம். காபாலிகன் புத்த பிக்ஷுவின் தலைக் குடுமியைப் பிடிக்கப் பார்த்து, மொட்டைத் தலையைத் தடவிவிட்டுக் கீழே விழும் கட்டத்தில் ஹாஸ்யரஸம் ததும்பியிருக்கும்! ஆனால் சபையோர் சிரித்து முடிவதற்குள்ளே ஏதோ யுத்தத்தைப் பற்றிய செய்தி வந்து, சக்கரவர்த்தி எழுந்துபோய் விட்டாராமே? சபையும் கலைந்துவிட்டதாமே ?......''

''ஆமாம், ஆமாம்; அதுதான் சற்று மனக்கிலேசத்தை அளித்தது. அதனாலேயே சிவகாமிகூட நாலு நாட்களாக உற்சாகமில்லாமல் இருந்தாள். அரங்கேற்றத்துக்குப் பிறகு இன்றைக்குத்தான் மறுபடியும் காலில் சதங்கை கட்டிக் கொண்டாள். அடிகளே, யுத்தம் எதற்காக வருகிறது? எதற்காக ஜனங்கள் ஒருவரையொருவர் கொன்று கொண்டு சாக வேண்டும்?'' என்றார் ஆயனர்.

''ஆயனரே ! அந்தக் கேள்வியை ஏழை பிக்ஷுவாகிய என்னிடம் கேட்டு என்ன பிரயோஜனம்? உலகத்திலுள்ள திரிபுவன சக்கரவர்த்திகளையும், குமார சக்கரவர்த்திகளையும், மகாராஜாக்களையும், யுவராஜாக்களையும், சிற்றரசர்களையும், படைத் தலைவர்களையும் கேட்க வேண்டும். கொலையும் கொடுரமும் நிறைந்த இந்த உலகத்தில் புத்த பகவான் அவதரித்து அன்பு மதத்தைப் பரப்பினார். அதற்காகப் பிக்ஷுக்களின் சங்கத்தையும் ஸ்தாபித்தார். அந்தப் புத்த பிக்ஷுக்களை ராஜ சபைகளில் பரிகசித்துச் சிரிக்கும் காலம் இது ! யுத்தம் ஏன் வருகிறது என்று என்னைக் கேட்டு என்ன பயன் ?''

அந்தப் பொல்லாத புத்தபிக்ஷுவிடம், பேச்சு யுத்தத்தில் அகப்பட்டுக் கொண்டு தன் தந்தை திணறுவதைச் சிவகாமி அறிந்தாள். அவளுடைய கண்களில் கோபக் கனல் வீசிற்று. அவள், ''அப்பா! புத்த பகவான் அன்பு மதத்தையும் அஹிம்சா தர்மத்தையும் உபதேசித்தது உண்மைதான். ஆனால் இந்தக் காலத்தில் அந்தப் புத்த பகவானுடைய பெயரைச் சொல்லிக் கொண்டு போலி பிக்ஷுக்கள் தோன்றி, மக்களை வஞ்சித்து ஏமாற்றி வருகிறார்கள். அதனால்தான் யுத்தம் முதலிய விபரீதங்கள் வருகின்றன !'' என்றாள்.

ஆயனருக்கு, 'இதேதடா வம்பு ?' என்று தோன்றியது. அங்கிருந்து சிவகாமியை எப்படியாவது அனுப்பிவிட எண்ணி அவளை இரக்கம் தோன்றப் பார்த்து, ''குழந்தாய், சிவகாமி! நீ வேணுமானால் உன்னை அத்தையிடம் போய்.....'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

அதற்குள் நாகநந்தி, ''ஆயனரே ! நான் தோற்றேன். சிவகாமி மிகவும் புத்திசாலி ; அவள் சொல்லியதில் ரொம்பவும் உண்மை இருக்கிறது!'' என்றார். அவருடைய கடூர முகத்தில் மறுபடியும் ஒரு கண நேரம் ஒரு விசித்திரமான புன்னகை காணப்பட்டது.

பேச்சை வேறு வழியில் திருப்பியாக வேண்டும் என்று ஆயனர் கருதிச் சுற்றுமுற்றும் பார்த்தார். அப்போது அவருடைய பார்வை அம்மண்டபத்தின் இன்னொரு பக்கத்தில் சிலைகளையும் சித்திரங்களையும் பார்த்துக் கொண்டு நின்ற பரஞ்சோதியின் மேல் விழுந்தது.

''சுவாமி! அந்தப் பிள்ளை யார் ? உங்களுடைய சீடனா?'' என்று கேட்டார் ஆயனர்.

## பதினாலாம் அத்தியாயம்

# தாமரைக் குளம்

தன்னைப் பற்றிப் பேசுகிறார்கள் என்பது காதில் விழுந்ததும் பரஞ்சோதி அவர்கள் இருந்த பக்கம் திரும்பிப் பார்த்தான்.

அதே சமயத்தில் புத்தபிக்ஷு, ''என்னுடைய சீடன் இல்லை, ஆயனரே ! தங்களுடைய சீடனாகப் போகிறவன். பரஞ்சோதி! இங்கே வா!'' என்றார்.

பரஞ்சோதி அவர்கள் அருகில் நெருங்கி வந்தான்.

அப்போதுதான் அவனை நன்ருகக் கவனித்த ஆயனர், வியப்புடன், ''யார் இந்தப் பிள்ளை? எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறது?'' என்ருர்.

''அப்பா! உங்களுக்குத் தெரியவில்லையா? அன்றைய தினம் மத யானையின் மேல் வேலை எறிந்தாரே, அவர்தான்!'' என்று உற்சாகத்துடன் கூறினாள் சிவகாமி.

பரஞ்சோதி நன்றியறிதலுடன் சிவகாமியை ஒருகணம் ஏறிட்டுப் பார்த்தான்.

ஆயனரின் முகத்தில் ஆச்சரியமும் ஆர்வமும் பொங்கின.

''என்ன! என்ன? அந்த வீர வாலிபனு இவன்? என்ன லாகவமாய் வேலை எறிந்தான் — மாமல்லர்கூட அதிசயிக்கும்படி! இவனுக்கு எந்த ஊர்? இத்தனை நாட்



களும் எங்கே இருந்தான்? தங்களை எப்போது சந்தித்தான்....?'' என்று சரமாரியாக ஆயனர் கேள்விகளை அடுக்கிஞர். சாதாரணமாக ஆயனர் தாம் ஈடுபட்டுள்ள கலைகளின் விஷயத்திலே தவிர வேறெதிலும் இவ்வளவு ஆர்வம் காட்டிப் பேசுவதில்லை.

''சித்தர்வாச மலைக்குப் போய்விட்டுத் திரும்பும்போது இந்தப் பிள்ளையை வழியில் பார்த்தேன்......'' என்று பிக்ஷு ஆரம்பிப்பதற்குள்ளே ஆயனர் பரஞ்சோதியை மறந்து விட்டார்.

''ஆஹா! அடிகள் சித்தர் மலைக்கா போயிருந்தீர்கள்? அங்கேயுள்ள சித்திர அதிசயங்களைப் பார்த்தீர்களா?'' என்ருர்.

''பார்த்தேன், ஆயனரே! அதைப் பற்றி அப்புறம் சொல்லுகிறேன். நான் வரும் வழியில் சாலை ஓரத்தில் இந்தப் பிள்ளை படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். இவனை ஒரு பெரிய நாக சர்ப்பம் கடிக்க இருந்தது. என்னுடைய கொல்லா விரதத்தைக்கூடக் கைவிட்டு அந்த நாகத்தைக் கொன்று இவனைக் காப்பாற்றினேன்.....''

''இது நல்ல வேடிக்கை! தங்கள் திருநாமம் நாகநந்தி; இவனை நாகம் தீண்டாமல் தாங்கள் காப்பாற்றினீர்கள்; இவன் எங்களை நாகம் கொல்லாமல் காப்பாற்றினன்! ஆகா! ஹா!'' என்று ஆயனர் சிரித்தார்.

நாகம் என்பது சர்ப்பத்துக்கும் யானைக்கும் பெயரானபடியால் ஆயனருக்கு மேற்படி சிலேடைப் பொருத்தம் மிக்க விநோதத்தை அளித்தது.

புத்தபிக்ஷு, ''இவனை நான் காப்பாற்றியதனுல் பல காரியங்களுக்குச் சாதகமாயிற்று. தங்களுக்கு இவன் ஓலை கொண்டு வந்திருக்கிறன்!'' என்ருர்.

''ஓலையா? யாரிடமிருந்து?''

''திருவெண்காட்டு நமசிவாய வைத்தியரிடமிருந்து. அவருடைய மருமகன் இவன்!''

ஆயனர் ஆர்வத்துடன் எழுந்து, ''என் அருமைச் சிநேகிதரின் மருமகனு நீ! உன் பெயர் என்ன, தம்பி!'' என்று கேட்டுக் கொண்டே பரஞ்சோதியைத் தழுவிக் கொண்டார். பிறகு, ''ஓலை எங்கே?'' என்று கேட்டார்.

பரஞ்சோதி நாகநந்தியை நோக்கினன். அவர், ''ஆயனரே! ஓலை காணுமற் போய்விட்டபடியால் வாலிபன் இங்கு வருவதற்கே தயங்கினன். அதற்காகவே இவனை நான் அழைத்துக் கொண்டு வந்தேன். இவனுடைய மாமன் தங்களுக்கும் நாவுக்கரசருக்கும் ஓலைகள் கொடுத்திருந்தாராம். அந்த ஓலைகளை மூட்டைக்குள் கட்டி வைத்திருந்தான். அன்றிரவு யானை மேல் வேலை எறிந்த இடத்தில் மூட்டை காணுமற்போய் விட்டது.....'' என்று நிறுத்தினர்.

அப்போது ஆயனர், ''ஆமாம்; ஆமாம்; யானை நின்ற இடத்தில் ஒரு மூட்டை கிடந்தது. அதை நான் எடுத்து வந்தேன். ஆனல், மறு நாள் கோட்டைக் காவல் தலைவர் ஆள் அனுப்பி அதை வாங்கிக் கொண்டு போய்விட்டார். போனல் போகட்டும்; என் அருமை நண்பரின் மருமகன் என்று சொன்னல் போதாதா? ஓலை வேறு வேணுமா?.... சிவகாமி! நம்மைப் பெரும் விபத்திலிருந்து காப்பாற்றிய வீரப் பிள்ளை இவன்தான். இவனுக்கு

உன்னுடைய நன்றியைத் தெரியப்படுத்து !'' என்றார்.

சிவகாமி பரஞ்சோதியைப் பார்த்த வண்ணம், ''இவருக்கு நான் நன்றி செலுத்தப் போவதில்லை. இவரை யார் விதிக்குக் குறுக்கே வந்து வேலை எறியச் சொன்னது? இவர்பாட்டுக்கு இவர் காரியத்தைப் பார்த்துக் கொண்டு போவதுதானே ?'' என்றாள்.

சிவகாமியின் இந்தக் கடுஞ்சொல், கேட்டுக் கொண்டிருந்த மூன்று பேரையும் சிறிது திடுக்கிடச் செய்தது.

நாகநந்தி ஆயனரைப் பார்த்து, ''உங்கள் குமாரிக்கு என்ன? ஏதாவது உடம்பு குணமில்லையா?'' என்று கேட்டார்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை, சுவாமி! அன்று அரங்கேற்றம் நடுவில் தடைப்பட்டதிலிருந்து அவளுக்கு உற்சாகக் குறைவு ஏற்பட்டிருக்கிறது. அது ஏதோ அபசகுனம் என்று நினைக்கிறாள்.. சிவகாமி! நீ உன் அத்தையிடம் போய், 'அதிதிகள் வந்திருக்கிறார்கள்' என்று சொல்லு, அம்மா !'' என்றார்.

''ஆகட்டும், அப்பா!'' என்று சொல்லிவிட்டுச் சிவகாமி அந்த வீட்டின் பின்கட்டை நோக்கிச் சென்றாள். மண்டபத்தின் பின் வாசற்படியை அவள் தாண்டிக் கொண்டிருந்தபோது புத்தபிக்ஷு பின்வருமாறு பரிஹாசக் குரலில் சொன்னது அவள் காதில் இலேசாக விழுந்தது: ''உம்முடைய குமாரியைத் தாங்கள் நன்றாகக் கவனிக்க வேண்டும், ஆயனரே! சாதாரணமாக, இளம் பெண்கள் உயிரின் மேல் வெறுப்புக் கொண்டார்கள் என்றால், அதற்குக் காரணம் காமதேவனுடைய புஷ்ப பாணங்களாகத்தான் இருக்கும் என்பது உமக்குத் தெரியாதா ?''

சிவகாமி தனக்குள், ''இந்தப் புத்த பிக்ஷு பொல்லாதவர்; நெஞ்சிலும் நாவிலும் நஞ்சு உடையவர்; இவருடன் அப்பாவுக்கு என்ன சிநேகம் வேண்டிக் கிடந்தது?'' என்று சொல்லிக் கொண்டாள்.

இரண்டாங் கட்டுக்குள் சிவகாமி நுழைந்ததும் அங்கே 'கலகல' வென்றும் 'சடசட'வென்றும், பலவிதமான சப்தங்கள் ஏககாலத்தில் உண்டாயின.

பச்சைக் கிளிகளும் பஞ்சவர்ணக் கிளிகளும், 'அக்கா! அக்கா!' என்று கூவின. நாகணவாய்ப் புட்கள் 'கிக்கி!' என்றன. புறாக்கள் 'சட சட'வென்று சிறகுகளை அடித்துக் கொண்டன. முற்றத்துக் கூரை மேல் உட்கார்ந்திருந்த மயில் 'ஜிவ்'வென்று பறந்து தரைக்கு வந்தது. அங்கிருந்த மான் குட்டி மட்டும் சப்தம் ஒன்றும் செய்யாமல், சிவகாமியின் முகத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டு அவள் அருகில் வந்து நின்றது.

இந்தப் பட்சிகள், மிருகங்கள் எல்லாம் சிவகாமி விளையாடிப் பொழுது போக்குவதற்காகவும், ஆயனரின் சிற்ப சித்திர வேலைகளுக்காகவும் இரண்டாவது கட்டில் வளர்க்கப்பட்டுவந்தன. சிவகாமி பிரவேசித்ததும் அவை போட்ட சத்தத்தைக் கேட்டு, ''சீ! பேசாமல் இருங்கள்! தலை வேதனை !'' என்று அதட்டினாள்.

உடனே அங்கு அதிசயமான நிசப்தம் உண்டாயிற்று.

சிவகாமி சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, ''இன்றைக்கு ரதியைத்தான் அழைத்துப் போக வேண்டும். ரதிதான் சத்தம் போடாமல் வருவாள் ! ரதி, வா!'' என்று கூறிவிட்டு மேலே



சென்றபோது, மான் குட்டி மட்டும் அவளைத் தொடர்ந்து சென்றது.

மற்றப் பட்சிகள் மௌனமாயிருந்த போதிலும், தலையைச் சாய்த்துக் கொண்டும் மற்றும் பலவிதக் கோணல்கள் செய்து கொண்டும் ரதியைப் பொறாமை ததும்பிய கண்களால் நோக்கின !

இரண்டாவது கட்டைத் தாண்டியதும், மூன்றாவது கட்டு ஒன்று இருந்தது. அது சமையல் கட்டு என்பது, அங்கு எழுந்த புகையினாலும், அடுப்பிலிருந்து வந்த பலவகை உணவுப் பதார்த்தங்களின் நறுமணங்களினாலும் தெரிய வந்தது.

தாழ்வாரத்தில் நின்றபடி, ''அத்தை!'' என்று கூப்பிட்டாள் சிவகாமி.

''ஏன், குழந்தை?'' என்று கேட்டுக் கொண்டு ஒரு மூதாட்டி சமையல் அறை வாசலில் தோன்றினாள்.

''அதிதிகள் இரண்டு பேர் வந்திருக்கிறார்கள். முன்னொரு தடவை வந்தாரே, கடுவன் பூனை போன்ற முகத்துடனே ஒரு புத்தபிக்ஷு, அவர் வந்திருக்கிறார்'' என்றாள் சிவகாமி.

''பெரியவர்களைப் பற்றி இப்படியெல்லாம் சொல்லாதே, கண்ணே — நீ எங்கே கிளம்புகிறாய், ரதியையும் அழைத்துக் கொண்டு?'' என்று அந்த மூதாட்டி கேட்டாள்.

'' அப்பாவும் அந்தப் புத்தபிக்ஷுவும் ஏதோ தர்க்கம் செய்து கொண்டிருக்கிறார்கள். அது முடிகிற வரையில் நான் தாமரைக் குளத்துக்குப் போய் வருகிறேன்!'' என்று சொல்லிவிட்டுச் சிவகாமி சமையற்கட்டைத் தாண்டிச் சென்று வீட்டின் கொல்லைப்புறத்தை அடைந்தாள்.



கொல்லைப்புறத்தில் வீட்டைச் சேர்ந்தாற்போல் மல்லிகை, முல்லை, அலரி, பாரிஜாதம், சம்பங்கி முதலிய பூஞ்செடிகளும் கொடிகளும் காணப்பட்டன. அவற்றையெல்லாம் தாண்டி மரங்கள் அடர்ந்த வனப் பிரதேசத்துக்குள்ளே சிவகாமி பிரவேசித்தாள். அந்தக் காட்டில் நடக்கும்போது அவள் ரதியிடம் பின்வருமாறு சொல்லிக் கொண்டு போனாள் :

'' என்ன, ரதி ! அப்பாவுக்கு என் அரங்கேற்றத்தின் போது இரண்டே இரண்டு பேர் வரவில்லை என்றுதான் வருத்தமாம்! இந்தப் புத்த பிக்ஷு வந்து என் அரங்கேற்றத்தைப் பார்க்கவில்லை என்று வருத்தம் என்ன வந்தது !.... யாருடைய பாராட்டுதலைப் பெறுவதற்காக நான் இரவு பகலாய்ப் படாத பாடுபட்டு இந்த நிருத்தியக் கலையைப் பயின்றேனோ, அவர் அன்றைக்கு வரவில்லை! இந்தப் பெரிய பல்லவ ராஜ்யத்துக்குள்ளே யார் மகா ரஸிகரோ, அப்பேர்ப்பட்டவர் வரவில்லை. ஏழு வருஷங்களுக்கு முந்தி, நான் உன்னைப் போல் சிறு குழந்தையாயிருந்த காலத்தில், எவர் என்னுடன் கைகோத்து நின்று தாமும் நடனம் ஆடுவேன் என்று பிடிவாதம் பிடித்தாரோ — தமக்கும் நடனக் கலை சொல்லிக் கொடுக்கும்படி எவர் என் மோவாய்க்கட்டையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினாரோ — அவர் வரவில்லை. ரதி! நீயே சொல்லு! ஆண் பிள்ளைகளைப் போல், அதுவும் இராஜ குலத்தில் பிறந்தவர்களைப்போல் பொல்லாதவர்கள் இந்த உலகத்தில் உண்டா....?''

ரதி பாவம், சிவகாமி தன்னிடம் சொல்லிக் கொண்டு வந்த விஷயங்களின் முக்கியத்துவத்தைக் கொஞ்சமும் அறிந்து கொள்ளாமல் ஆங்காங்கு தரையில் காணப்பட்ட அறுகம் புல்லின் நுனியைக் கடித்து மென்று கொண்டு வந்தது.

அரை நாழிகை நேரம் அவர்கள் காட்டுக்குள் நடந்து வந்த பிறகு, கொஞ்சம் இடைவெளி காணப்பட்டது. அந்த இடைவெளியில் ஓர் அழகிய சிறு தடாகம் இருந்தது. அதில் தாமரை, செங்கழுநீர், நீலோத்பலம் முதலிய மலர்கள் செழித்து வளர்ந்திருந்தன.

சிவகாமி அந்தக் குளத்தில் இறங்கி நீர்க் கரையோரமாய் நின்று தண்ணீரில் தன்னுடைய நிழலைப் பார்த்தவண்ணம் பேசினாள்:

''ரதி! இதைப் பார் ! அவர் மட்டும் இனிமேல் எப்போதாவது வரட்டும் ; நான் முகம் கொடுத்துப் பேசப் போவதே இல்லை. 'போதும், உம்முடைய சிநேகம் ! போய்விட்டு வாரும் !' என்று கண்டிப்பாய்ச் சொல்லுகிறேனா, இல்லையா, பார்!'' என்று சொல்லிய வண்ணம், அதற்கேற்ப அபிநயம் பிடித்தாள்.

சிவகாமி குளக் கரையில் வந்து நின்ற சிறிது நேரத்துக்கெல்லாம் காட்டில் சற்றுத் தூரத்தில் ஓர் உயர்ந்த ஜாதிக் குதிரை வந்து நின்றது. அதன் மேல் வீற்றிருந்த வீரன் சத்தம் செய்யாமல் குதிரை மேலிருந்து இறங்கித் தடாகத்தை நோக்கி வந்தான். (தொடரும்)

# உலகிலேயே சிறந்த உங்கள் குழந்தைக்காகவே பிறந்தது

Glaxo
BABY
TENDER TALC

உங்கள் குழந்தையைப் போலவே மென்மையில் சிறந்தது.

இப்போது உங்கள் குழந்தைக்கெனவே க்ளாக்ஸோ மற்றொரு மென்மையான பவுடரை வழங்குகிறது...க்ளாக்ஸோ பேபி பவுடர். இது அதிசன்னமாகத் தயாரிக்கப்படுவதால், உங்கள் பாப்பாவின் பட்டுமேனியில் மென்மையைப் பொழிகின்றது. க்ளாக்ஸோ பேபி ஃபுட், ஆஸ்டர் மில்க், மற்றும் பாரெக்ஸ் போன்ற க்ளாக்ஸோ தயாரிப்புகள் உங்களுக்கு என்றுமே வழங்கி வந்த நம்பகத் தன்மையை இதுவும் [illegible].

[illegible]—க்ளாக்ஸோ.

**க்ளாக்ஸோ பேபி பவுடர்**

100 கிராம் மற்றும் 400 கிராம் டின்களில் கிடைக்கிறது.

CMGBT-2-202 ar TM

# சம்பத் ஒரு ஹீரோ!

வெல்லப் பாகில் மிதந்து வரும் முந்திரிப் பருப்பு மாதிரி புஷ்பா சைக்கிளில் வந்து கொண்டிருந்தாள்.

முதல் முதலாகக் கச்சேரி செய்யப் போகிற வனைப் போல் சம்பத் தொண்டையைக் கனைத் துக்கொண்டான்! செருமிக் கொண்டான். அவ்வளவு ஆயத்தம் பண்ணியும் அவன் அருகே வந்தபோது பார்த்து ரப்பர் பந்தாட் டம் ஒன்று தொண்டையில் வந்து அடைத்துக் கொண்டது.

'மிஸ் மிஸ்' என்பதாக நினைத்துக்கொண்டு 'பிஷ் பிஷ்' என்று கூப்பிட்டான்.

அவளுக்கு அது விசில் சத்தம் போல் கேட் டது. ''என்ன விஷயம் இளைஞரே!'' என்று சைக்கிளை விட்டு இறங்கினாள்.

''நீங்கள் என் இதயத்தில் குடியேறி நீண்ட காலமாகிறது. உங்கள் நினைவு என் உள்ளத்தில் மணக்கிறது; ஒலிம்பிக் தீப்பந்தம் போல இருபத்திநான்கு மணி நேரமும் ஒளி விடுகிறது. நீங்கள் தினமும் இப்படி நாலு மைல் சைக்கிளில் வருவதைப் பார்த்து என் இதயம் ரத்தக் கண்ணீர் வடிக்கிறது!''

''ஏன், பெரிகார்டியம் கிழிந்து போய் விட்டதா?''

''உங்களுக்கு ஆட்சேபணையில்லாவிட்டால் தினமும் உங்களைக் கல்லூரிக்கு என் ஸ்கூட் டரில் அழைத்து வருகிறேன்! தப்பாக நினைத் துக் கொள்ளாதீர்கள். எனக்கு மெழுகு மாதிரி இளகின மனசு. உங்க மாதிரி டீன் ஏஜ் பொண்ணு இப்படிச் சைக்கிள் ஓட்டிக் கஷ்டப்படறதைப் பார்த்து மனம் பொறுக்காமல் சொல்கிறேன்.''

''உங்க தங்கை மல்லிகாவும் என் மாதிரி டீன் ஏஜ் பொண்ணுதானே? அவளும் தினம் சைக்கிளிலேதானே வரா. அதை மட்டும் எப்படிப் பொறுத்துக் கொள்கிறது உங்க மெழுகு மனசு?''

திகைத்து நின்றான் சம்பத். புஷ்பா இப்படி மடக்குவாள் என்று அவன் எதிர்பார்க்க வில்லை. ''அவள் சைக்கிளிலா வருகிறாள்? காரிலாக்கும் என்று நினைத்தேன்'' என்று மாவரைத்தான்.

''நாளையிலிருந்து மல்லிகாவை அழைத்து வாருங்கள்.''

''அவன் ஒரு முசுடு. வள்வள் என்று விழு வான். உங்களைப் போல் இனிமையாக...''

''நான் அவனைவிட மோசம். என் சொந்த ஊரே ராஜபாளையம் தெரியுமா? மிஸ்டர் சம்பத், பெண்களிடம் கௌரவமாகப் பேசக் கற்றுக்கொள்ளுங்கள். என் அண்ணன் தங்க துரையும் இதே கல்லூரியில்தான் படிக்கிறார்.



அவர் ஒரு நாளாவது உங்க தங்கையிடம் இப்படிப் பேசியிருப்பாரா?''

சம்பத்துக்குத் தைரியம் வந்துவிட்டது. ''பேசறதுக்கு யோக்கியதை வேண்டாமா?''

''ஓ! நான் அதை மறந்து விட்டேன். என் அண்ணன் பேசுவதற்கு ஏற்ற யோக்கியதை உங்கள் தங்கைக்கு இருக்குமென்றே நினைத்தேன் — நீங்கள் இப்போது சொல்லும்வரை!''

''நான் உங்கள் அண்ணனைச் சொன்னேன். என் தங்கையோடு பேச உங்கள் அண்ணனுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது?''

''என்னோடு பேச உங்களுக்கு மட்டும் என்ன யோக்கியதை இருக்கிறது?''

''நான் எப்படிப்பட்ட விளையாட்டு வீரன்! உங்கள் அண்ணன் பாவம்! மைதானம் பக்கமே வந்ததில்லையே!'', என்று காலரைத் தூக்கி விட்டுக் கொண்டான்.

''மிஸ்டர் சம்பத்! இப்படி வாய்ச் சவடால் பேசும் ரோட்சைட் ரோமியோக்களை எந்தப் பெண்ணும் விரும்ப மாட்டாள். ஓர் உண்மையான வீரனைத்தான் நான் பாராட்டுவேன். உங்களிடம் கோழைத்தனம்தான் காணப்படுகிறது!''

''நானு கோழை? கத்த வீரன்!''

''அப்படியானால் அதை நிரூபித்துக் காட்டுங்கள். பார்க்கலாம்!'' என்று கூறிவிட்டுப் புஷ்பா போய் விட்டாள்.

புதிதாகத் தொடங்கப்பட்ட அந்தக் கல்லூரி ஊருக்கு வெளியே இரண்டு மைல் தொலைவில் இருந்தது. இன்னும் பஸ் போக்குவரத்து ஆரம்பிக்கவில்லையாதலால்

## வானவர்கோன்

''கல்கியின் மூலம் அறிமுகமாகும் 'பிரான்ட் நிபு' எழுத்தாளன் நான்'' என்று ஆரம்பித்து திரு அ. தேவராசன் தம்மைப் பற்றித் தொடர்ந்து கூறுகிறார்: ''எனது முதல் கதையே பழம் பெருமையும் தரமும் படைத்த பத்திரிகையான கல்கியில் பிரசுரமாவது குறித்துப் பெருமையடைகிறேன். தேவராசன் என்ற இயற்பெயரின் தமிழ்ப் பதிப்புதான் 'வானவர் கோன்' என்ற புனைபெயர். ஐந்து மாதங்களுக்கு முன்னர்தான் பதினேழாம் வயதைக் கடந்த மன் ஏழுரான நான் காரைக்குடி அழகப்பா கல்லூரியில் பி. எஸ்ஸி. (பிசிக்ஸ்) முதலாண்டு படிக்கிறேன். இளைஞர்களுக்கும் எழுதத் தெரியும் என்று நம்பி அவர்களது படைப்புக்களுக்கு இடம் கொடுக்கும் கல்கிக்கு எனது நன்றி!''

மாணவர்கள் நடந்தோ, சைக்கிளிலோதான் போக வேண்டியிருந்தது. காலையில் கல்லூரி தொடங்கு முன்னரும் மாலையில் கல்லூரி முடிந்த பின்னரும்தான் கல்லூரிச் சாலையில் நடமாட்டம் இருக்கும். மற்றப்படி பகல் முழுதும் வெறிச்சோடிக் கிடக்கும். அந்தச் சாலையில் ஒரு மைல் தூரத்துக்கு அப்பால் அடர்ந்த தோப்பு ஒன்று இருந்தது.

அன்று பிற்பகல் மூன்றரை மணிக்கு புஷ்பா தனது சைக்கிளில் தனியாகத் திரும்பிக் கொண்டிருந்தாள். சற்று நேரத்துக்கு முன்னர்தான் அவளுக்கு டெலிபோன் வந்தது —ஊரிலிருந்து அவளுடைய மாமா வந்திருக்கிறார் என்று. அன்று மாலை ஆறு மணி ரயிலுக்கே அவர் திரும்பவேண்டியிருந்ததால் உடனே அவளைக் காண விரும்பினார். எனவே, கடைசி 'பீரியடு'க்கு 'டிமிக்கி' கொடுத்து விட்டுப் புறப்பட்டாள் புஷ்பா.

தோப்பை ஊடறுத்துக் கொண்டு சென்ற பாதையில் வந்து கொண்டிருந்த புஷ்பா தூரத்தில் வரும்போதே மர நிழலில் ஒரு கார் நிற்பதைக் கவனித்தாள். ஆனாலும் அதைப் பற்றிச் சிந்திக்காமல் சைக்கிளை மிதித்தாள்.



காரிலிருந்து ஒரு தடியன் இறங்கினான், லிங்காங்கின் தம்பி மாதிரி.

புஷ்பாவுக்கு உடல் நடுங்கியது. சைக்கிளை வேகமாக மிதித்தாள்.

ஆனால் சைக்கிள் நகரவில்லை. லிங்காங் தம்பி சைக்கிள் காரியரைப் பிடித்து இழுத்துக் கொண்டிருந்தான்!

சட்டென்று இறங்கிக்கொண்ட புஷ்பா கூச்சலிட்டுக் கொண்டு ஓடினாள்.

இதற்குள் தாராசிங் பரம்பரையில் தோன்றிய இருவர் வேலிக்குப் பின்னாலிருந்து வெளிப்பட்டார்கள். புஷ்பாவின் வாயைப் பொத்தி ஒரு பூங்கொத்தைத் தூக்குவது போல் அவர்கள் தூக்கிச் சென்றார்கள். அவள் பீதியால் விழி பிதுங்கக் கையையும் காலையும் உதறினாள்.

அந்தச் சமயம் ஆதிமூலமே அவசரமாக வருவது போன்று 'டுர்ர்ர்ர்' என்று ஸ்கூட்டர் ஓசை கேட்டது. மறு விநாடி சம்பத் கன வேகமாக வந்து சேர்ந்தான். மூன்று முரடர்களின் பிடியில் சிக்கி, புஷ்பா தன்னந் தனியாகத் தவிப்பதைக் கண்டதும் அவன் நெஞ்சம் பொறுக்கவில்லை.

ஸ்கூட்டரை அப்படியே ஓட விட்டுவிட்டு, "டாய்! எவண்டாவன் என் புஷ்பாவைத் தொடத் துணிந்தவன்!" என்று பிளிறிக் கொண்டே குதித்தோடி வந்தான்.

"இவன் யாருடா, பொடியன்!" என்று அலுத்துக் கொண்ட 'லிங்காங்', "முத்து! பையனைக் கொஞ்சம் கவனி!" என்று சின்னத் தாராசிங்குக்குக் கட்டளையிட்டான்.

முத்து எனப்பட்ட அந்த ஆறடிக் கட்டை சம்பத்திடம் திரும்பினான். "ஒழுங்கா ஓடிடு, தம்பி!" என்று எச்சரித்தான்.

சம்பத் சினிமா வசனம் பேசினான். "ஓடுவதா? கயவர்களிடம் என் கண்மணியை விட்டு விட்டுக் கால் பிடரியில்பட ஓடுவதா? தாய் மேல் ஆணை! தமிழ் மேல் ஆணை! உன்னை ஒரே குத்தில் வீழ்த்துகிறேன். அருகே வா! அன்பே வா! துறாத்துறா! இப்போது என்ன சொல்கிறாய்? கோழையே! இளம் பெண்ணைக் கடத்தத் துணிந்த இதயமில்லாதவனே! என் கிரிக்கெட் மட்டைக்குப் பதில் சொல்லி விட்டு அந்தக் கிளி மொழியாளைத் தொடு!"

அவன் வீசிய மட்டை முத்துவின் இடது தோளில் இறங்கியது.

முத்து அலறினான்.

சம்பத் புஷ்பாவைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தான். "பெண்ணைத் தொடத் துணிந்த பேதையே! வீரனைக் கண்டதும் வீறிட்டலறும் வீணனே! ஓரடிக்கு இப்படி உயிர் போவது போல் அலறுகிறாயே, இன்னும் பதினைந்து அடிகள் பாக்கி இருக்கின்றனவே!" மட்டையைச் சுழற்றினான் சம்பத். மட்டை கையைவிட்டு நழுவிப் புஷ்பாவின் காலடியில் போய் விழுந்தது.

முத்து கத்தியை உருவினான். மதிய வெய்யிலில் அது பளபளத்தது.

'விஷ்க்' என்று கத்தியை வீசினான் முத்து.

கச்சிதமான வீச்சு! சம்பத்தின் சில்க் ஷர்ட் டர்ர்ர்ர்ர்ர்!

"முட்டாளே! சட்டையை ஏண்டா கிழித்தாய்? எண்பது ரூபாய் சட்டை வீணாகிவிட்டதே! இந்த நேரம் நெஞ்சில் பட்டிருந்தால்?"

"அடுத்த வீச்சில் உன் நெஞ்சுத் தோலைக் கிழிக்கிறேன், பார்!"

அவன் சொல்லி வாயை மூடவில்லை. படாரென்று அவன் மண்டையில் ஓர் அடி விழுந்தது.

சீறுகின்ற பெண் புலியாய்ப் புஷ்பா நின்று கொண்டிருந்தாள். அவள் கையில் சம்பத்தின் கிரிக்கெட் மட்டை!

முத்துவின் தலையிலிருந்து வழிந்த இரத்தம் கண்களை மறைக்க அவன் மெதுவாய்த் தொய்ந்து தரையிறங்கினான்.

அடுத்த விநாடியே லிங்காங்கும் தாராசிங்கும் அவனைத் தூக்கிக் காரில் போட்டுக் கொண்டனர். கார் ஓடி மறைந்தது.

"ஐயையோ! அவனைப் பலமாக அடித்து விட்டாயே! ரத்தம் வருகிறதே!" என்று பதறினான் சம்பத்.

"வந்தால் என்ன? கிட்நாப் குற்றத்துக்கு ஏழு வருஷங்கள் உள்ளே தள்ளலாமே!"

"அது சரி, ஆசாமி மண்டையைப் போட்டு வைத்தால்?"

"வேறு என்ன செய்வது? நீங்கள் அவன் காலடியில் கிடக்கிறீர்கள்; அவன் கத்தியால் உங்களைக் குத்தப் போகிறான்; நான் வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்க முடியுமா? எனக்காக நீங்கள் உயிர் துறப்பதா! அதைவிட அவர்கள் அத்தனை பேரையும் கொன்று விட்டுத் தூக்கு மேடைக்குப் போவேன்."

"எனக்காக நீ உன் வாழ்வை வீணாக்கிக் கொள்வதா?"

"உங்களுக்காக எதையும் செய்வேன், சம்பத்!" என்ற புஷ்பா முதன் முறையாக நாணித் தலை குனிந்தாள்.

"அப்படியானால்......"

"என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்!" என்று அவன் மார்பில், கிழிந்த சட்டையில் முகம் பதித்தாள் புஷ்பா.

"ஏதாவது சினிமாவுக்குப் போகலாமா?"

"நாளைக்குப் போகலாம். இன்று என் மாமா வந்திருக்கிறார்" என்று புறப்பட்டாள் புஷ்பா.

சம்பத் தன் மனத்துக்குள்ளேயே சிரித்துக் கொண்டான்.

அன்று மாலை 3-45.

ஆங்கிலப் பேராசிரியர் ஷேக்ஸ்பியரை அக்கு வேறு ஆணிவேறாகப் பிரித்துக் காட்டிக் கொண்டிருந்தார். தங்கதுரை கொட்டாவி விட்டபடி, சன்னல் வழியே வெளியே பார்த்தான். அவன் விழிகள் விரிந்தன. மல்லிகா தனியாகச் சைக்கிளில் வீட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள்.

அதே விநாடி தங்கதுரை வகுப்பைவிட்டு வெளியே வந்தான். அவன் மாடி இறங்கிச் சைக்கிள் ஸ்டாண்டுக்கு வருவதற்குள் மல்லிகா வெகுதூரம் போய்விட்டாள். அவளிடம் தன் காதலை வெளியிடச் சந்தர்ப்பத்துக்குக் காத்துக் கொண்டிருந்த தங்கதுரை அவளை வேகமாகப் பின்தொடர்ந்தான்.

திடீரென்று ஏற்பட்ட தலைவலியைப் பொறுக்க மாட்டாமல் வீட்டுக்குப் புறப்பட்ட

# நீங்கள் செய்வது எதுவானலும் சரி, பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் அதை சிறந்த முறையில் செய்ய உதவுகிறது.



பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் ஒரு 100 வாட் பல்பினைப் போல் இருபங்கு ஒளி தருகிறது. இருப்பினும் இதற்கு ஒரு 40 வாட் பல்புக்கான அளவு மின்சாரமே தேவைப்படுகிறது. பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்தி மின்சாரத்தை மிச்சப்படுத்துங்கள்.
தரம் மற்றும் உழைப்பு இவ்விஷயத்தில் பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டே வாங்குவதற்குச் சிறந்ததாகும். கச்சிதமான பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் யூனிட் தரமான உறுப்புகளுடன் முன்கூட்டியே ஒயர் செய்யப்பட்டதாகும். பொருத்துவதற்கு எளிதானது. உபயோகிப்பதற்கு சிக்கனமானது. வேலைகளை சிறந்த முறையில் செய்ய இது உதவுகிறது—உங்கள் கடையிலும் சரி, வீட்டிலும் சரி.

**அரைப்பங்கு செலவில் இருபங்கு ஒளி!**

சிறந்த ஒரு லாம்ப் வேண்டுமா ?
அதை முதலில் அளிப்பது பிலிப்ஸ்

# பிலிப்ஸ்




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

# மின்னலடிக்கும் வெண்மைக்கே... ரின்




ரின். சோப் அல்ல இது. புத்தம் புதுமையான ஒரு சலவைச் சாதனம்—வில்லை வடிவிலே ஒரு டிடர்ஜெண்ட். சிக்கன மிக்கது ரின்: சோப்பைவிட மேலும் அரை மடங்கு அதிகத் துணிகளை வெளுத்திடும். திறந்த சோப்புப் பெட்டியிலே ஈரமுலர வைத்துக் கொண்டால் சிறந்த பலன் அளிக்கும் ரின். குடும்பத்திலுள்ள ஆடவரின், பெண்டிரின், குழந்தையரின்...யாவரின் துணிகளிலும் மின்சுடரின் வெண்மை பளிச்சிடவே: ரின்!

**சலவையோ யானையளவு!**

**சோப்பைவிட அரை மடங்கு அதிகத் துணிகளை வெளுப்பது ரின்!**

மல்லிகா தோப்பு வளைவை அடைந்ததும் மர நிழலில் ஒரு கார் நிற்பதைக் கண்டாள்.

காரின் அருகே பீடியைப் புகைத்துக் கொண்டு ஒரு லுங்கி நின்றிருந்தான். அவன் அருகில் திருகு மீசையும் முண்டாப் பனியனுமாய் இன்னொருவன். பரட்டைத் தலையும் கட்டம் போட்ட சட்டையுமாய் மற்றொருவன் காரினுள் இருந்தான்.

அந்த நேரத்தில் அந்த இடத்தில் அவர்களைக் கண்ட மல்லிகா அச்சம் அடைந்தாள். ஆனாலும் சகஜமாகச் சைக்கிளை ஓட்டினாள்.

அவள் அவர்களை அலட்சியப்படுத்தினாலும் அவர்கள் அவளை அலட்சியப்படுத்தவில்லை. ''ஆ! கிளி சிக்கிடுச்சு!'' என்று கத்திக் கொண்டே ஓடி வந்தான் கைலி.

மல்லிகாவுக்குத் தொண்டையை அடைத்தது. ''நீ..... நீங்கள் யார்?''

கைலி விகாரமாக இளித்துக் கொண்டே சொன்னான். ''நாங்க வியாபாரிங்க. உன் மாதிரி அழகான பொண்ணுங்களைக் கிராமங்களிலே கொள்முதல் பண்ணி வெளி ராஜ்யங்களுக்குக் கொண்டு போய் விற்போம். ஏதோ தலைக்கு மூவாயிரம், நாலாயிரம் கிடைக்கும். அதை வைச்சுக்கிட்டுச் சிக்கனமாப் பொழைச்சுக்கிட்டிருக்கோம்.''

''ஏண்ணே, பொண்ணு ரொம்ப அழகாயிருக்காளே. அந்த பம்பாய் சேட்டுக்கிட்ட விப்பமா, நாகபுரி கிழவிகிட்டே விற்கலாமா?''

மல்லிகாவுக்குத் தலை சுற்றியது. கடவுளே, இதென்ன கோரம்! இளம் பெண்களைக் கடத்திக் கொண்டு போய் விற்பதாவது! அவர்களை வாங்குபவர்கள் என்னென்ன பாடு படுத்துவார்கள்! நமக்கும் அந்தக் கதியா! ''ஐயோ'' என்று அலறினாள்.

'' கூச்சல் போடாமல் வந்துடு. இங்கே யாரும் வரமாட்டாங்க. வந்தாலும் பந்தாடிடுவோம்.''

இந்தச் சமயத்தில்தான் தங்கதுரை அங்கே வந்து சேர்ந்தான். மூன்று முரடர்களின் பிடியில் சிக்கித் தவிக்கும் மல்லிகாவைக் கண்டதும் அவனுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. சே! பட்டப் பகலில் இப்படி ஒரு பிரமையா!

'' துரை, என்னைக் காப்பாற்றுங்கள்!'' என்று குரல் கொடுத்தாள் மல்லிகா.

''நெருங்காதே! உனக்கு உயிர் மேல் ஆசையிருந்தால் ஓடிவிடு!'' என்று பரட்டையன் மிரட்டினான்.

பேசாமல் ஓடிவிடுவதே உத்தமமான காரியம் என்று முடிவு செய்து திரும்பினான் துரை. ஆனால், கைலி அவனை விடவில்லை. ''இன்னா நைனா மொறைக்கிறே?'' என்று யானைத் துதிக்கைகள் போல் பருத்து நீண்டு கிடந்த கைகளை நீட்டிக் கொண்டு எதிரே வந்து மறித்தான்.

உள்ளுணர்வு உந்தித் தள்ள, தன்னையறியாமல் தற்காப்புக்காகக் கையை வீசினான் துரை. என்ன ஆச்சரியம்! சரசரவென்று கறங்குபோல் சுழன்று காரில் போய் விழுந்தான் கைலி.

துரைக்கு வியப்பால் வாயடைத்துக் கொண்டது! தன் கைக்குத்தான் அவ்வளவு வலிமையா, அல்லது அவன்தான் அவ்வளவு சோனியா? நான் என்ன திடீரென்று சினிமாக் கதாநாயகன் ஆகிவிட்டேனா? என் கைக்குள் ஏதாவது மந்திரக்கோல் இருக்கிறதா? பார்வையிலேயே பாதி உயிரை வாங்கும் பயங்கரப் பயில்வான்கள் இப்படிப் பல்டியடிக்கிறார்களே!

''நீங்கள் இவ்வளவு பெரிய ஆள் என்று இதுவரையில் எனக்குத் தெரியாதே!''

''உனக்கு மட்டுமென்ன, எனக்கே இது வரையில் தெரியாதே, மல்லிகா!''

'' என்ன அடக்கம்! துரை, நான் உயிர் பிழைத்திருப்பதே உங்களால்தான். இந்த உயிர் உங்களுக்கே உரியது. என் உயிரையும் அதற்குச் சொந்தமான உடலையும் உங்களுக்கே அர்ப்பணிக்கிறேன். ஏற்றுக் கொள்வீர்களா?''

துரை தேன் குளத்து மீனானான்!

சம்பத் உற்சாகமாய் விசில் அடித்துக் கொண்டு வந்தான்.

''நாகப்பா! உன் திட்டம் பிரமாதம்! நான் ஒரு வீரன் என்று புஷ்பா ஒப்புக் கொண்டுவிட்டாள்! நாளை நாங்கள் படம் பார்க்கப் போகிறோம்!''

'' பலே! நான் அனுப்பிய ரௌடிகள் எப்படி நடித்தார்கள்?''

''பிரமாதம்! ஆனாலும் ஒருத்தன் கத்தியை எடுத்து வீசியதும் நான் நிஜமாகவே பயந்து விட்டேன்!''

இந்தச் சமயத்தில் மூன்று பேர் வந்து நின்றார்கள் — கைலி, திருகு மீசை, பரட்டைத் தலை. ''சலாமுங்க!'' என்றான் பரட்டையன்.

''யார் நீங்க? என்ன வேணும்?'' என்று கேட்டான் சம்பத்.

நாகப்பன் திகைத்தான். '' என்ன இப்படிக் கேட்கிறாய்! இவர்கள்தான் நான் அனுப்பிய ரௌடிகள்!''

''இவர்களா!'' சம்பத் குழம்பினான். ''நான் இவர்களோடு சண்டை போடவில்லையே!''

''ஆமாங்க. அந்தப் பொண்ணு பின்னடி இவர் வரலியே! இன்னொருத்தர்தான் சைக்கிள்லே வந்தாரு!'' என்றான் கைலி.

'' என்னப்பா இது குழப்பம்! அப்படியானால் நான் யாரோடு சண்டை போட்டேன்? இவர்கள் யாரோடு சண்டை போட்டார்கள்?''

அப்போது மல்லிகாவும் துரையும் ஜோடியாகச் சைக்கிளில் சென்றார்கள்.

''அதோ, அந்தப் பெண்ணைத்தான் நாங்க மறிச்சோம். பக்கத்திலே போறவர்தான் வந்து காப்பாத்தினாரு!'' என்று விளக்கினான் திருகு மீசை.

''அட, பாவிகளா! என் பணத்தை வாங்கிக் கொண்டு ஆள் மாறாட்டமாக எவனுக்கோ வீரன் பட்டத்தை வாங்கிக் கொடுத்துவிட்டீர்களே! நான் அசட்டுத்தனமாக யாரோ உண்மையான ரௌடிகளோடு மோதியிருக்கிறேனே! அவன் வீசிய கத்தி என் நெஞ்சில் பட்டிருந்தால்.....?''

பேச்சை முடிக்கவில்லை, அந்த வீண் பயத்தால் மயங்கிப் போய் விழுந்தான் சம்பத்!

**தூக்குமேடைக்குச் செல்ல நேர்ந்தாலும் சாகாவரம் பெற்றுவிட்ட கதாபாத்திரம் .....**

# எங்கள் தாய்

மல்லியம் புரொடக்ஷன்ஸ் தயாரிப்பான இந்தப் படம் பல பாத்திரங்களையும், பல்வேறு உணர்ச்சிப் போராட்டங்களையும் கொண்டது.

கடமையில் தவறாத ராணுவ அதிகாரியின் மனைவியாக வரும் சாவித்திரிதான் இந்தப் படத்தின் கதாநாயகி — கவர்ச்சியோடு காதலித்துக் கடிமணம் புரிந்து கொள்ளும் கதாநாயகி அல்ல; உணர்ச்சியில் பொங்கித் துடிக்கும் கதாநாயகி. தான் பெற்ற ஐந்து பிள்ளைகளையும் நேர்மையான நெறியில் வாழச் செய்வதற்காக அந்தத் தாய் எடுத்துக் கொண்ட அரும் முயற்சியில் தூக்குமேடைக்கே செல்ல நேர்டுகிறது; ஆனால் அந்தப் பாத்திரம் சாகாவரம் பெற்றுவிடுகிறது. காட்சிக்குக் காட்சி படம் முழுதும் சாவித்திரி நிறைந்து நிற்பதைப் பார்க்கும்போது நம் மனத்திலும் நிறைவு ஏற்படுகிறது.

மேஜர் சுந்தரராஜன் மேஜராகவே வந்து படத்தை ஆரம்பித்து வைத்துவிட்டுப் போய்விடுகிறார்.

ராணுவ அதிகாரியின் மூத்த புதல்வனாக வருபவர் வி. கோபாலகிருஷ்ணன். அருமையாக நடித்திருக்கிறார். அடுத்த புதல்வன் ஏவி. எம். ராஜன். டாக்டராக வந்து உணர்ச்சிப் பிரவாகமாக நடிக்கிறார்.

புது முகம் சிவசங்கர் மேஜரின் இன்னொரு புதல்வன். நடிப்பில் புதுமுகமாக இல்லாமல், அநுபவம் பெற்ற பழைய முகம் மாதிரி சிறப்பாக நடித்திருக்கிறார். தேங்காய் சீனிவாசன் மேஜரின் மற்றொரு புதல்வன். டாக்சி டிரைவராக வந்து நகைச்சுவை ததும்பவும், உணர்ச்சி பரவசமாகவும் நடித்திருக்கிறார்.

இதயநோயாளியாக வரும் 'வெண்ணிற ஆடை' நிர்மலாவுக்குக் கட்டிய கணவனிடமே தான் களங்கமற்றவள் என்பதை நிரூபிக்கும் நிர்ப்பந்தத்துக்குள்ளான ஓர் உணர்ச்சிமயமான பாத்திரம். நன்றாய் நடித்திருக்கிறார்.

ஏ. சகுந்தலாவுக்கு வழக்கமான ஆடைக் குறைப்புப் பாத்திரம்; கவர்ச்சி நடனத்துக்கும் குறைவில்லை. அறையில் ஆடியதோடு நின்றுவிடாமல், ஆற்றங்கரையிலும் ஓடிப் பாடி ஆடுகிறார். என்ன பாட்டோ, என்ன மெட்டோ! என்ன ஆட்டமோ! கஷ்டகாலந்தான்! ஒரே வேதனை!

ஐந்து பாடல்களுள் "நிலவைப் பார்த்து வானம் சொன்னது" என்ற பழைய பாட்டு ("சவாலே சமாளி"யில் கேட்டது) தான் இனிமையாயிருக்கிறது.

இப்பொழுதெல்லாம் திரைப்படங்களின் இன்றியமையாத காட்சியாகிவிட்ட கற்பழிக்கும் காட்சி (இதைக் காட்சி என்று சொல்லலாமா?) இப்படத்தில் 'ஃபினாஷ் பாக்' உத்தியில் இரண்டு தடவை வருகிறது. தயாரிப்பாளர்கள் அதிலும் குறை வைக்கவில்லை!

திரைக்கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய மூன்று பெரும் பொறுப்புக்களை ஏற்றிருக்கும் மல்லியம் ராஜகோபால்'பாக்ஸ்ஆபீஸ்'பாடாவதிகளை விரும்பியோ விரும்பாமலோ சேர்த்துத் தொலைத்ததைத் தவிர மற்றப்படி தம் கடமைகளைச் சரிவர நிறைவேற்றியிருக்கிறார்.

மூக்காயிட்ட ஓர் அந்தணர் குலத்து விதவையைக் கொண்டு வந்து நிறுத்தி, தத்துவம் பேச வைத்து, அத்துடன் விட்டு விடாமல் சினிமாவைப் பற்றிக் கவர்ச்சியாகவும் பேச வைத்திருப்பது எந்த அளவில் திரைக்கதைக்கு உதவியாயிருக்கிறது என்பது புரியவில்லை. அதில் ஹாஸ்யம் இருப்பதாகவும் ஒப்புக் கொள்ள முடியாது. அது முற்றிலும் தேவையில்லாத பாத்திரம்!

இனிப்பான திரைப்படத்தில் அசட்டுத் தனங்களையும் சேர்த்து அசட்டுத் தித்திப் பாக்கி விட்டனரே!

— **காந்தன்**



# கண்ணகியின் சந்ததிகள்

மலர்மன்னன்

'அம்மாவின் பேச்சைக் கேட்காமல் வந்தது தப்பு' என்று ஸ்ரீ நினைத்துக் கொண்டான்.

மணி பன்னிரண்டு அடிப்பதற்குள் எல்லாம் முடிந்து வீட்டுக்குத் திரும்பிவிடலாம் என்றுதான் ஸ்ரீ நினைத்திருந்தான். இங்கிருந்து புறப்படுவதற்கே அத்தனை நாழியாகிவிடும் என்பது இங்கு வந்த பிறகுதான் தெரிந்தது.

மூன்று வருஷங்களுக்கு முன்பே பெயரைப் பதிந்து கொண்டிருந்த அவனை இன்றுதான் முதல் தடவையாய் வேலை வாய்ப்புத் தேடித் தரும் அலுவலகம் அழைத்திருக்கிறது.

நேற்று பிற்பகல் தபாலில் அந்த அழைப்பு வந்தது. அதிலிருந்தே ஸ்ரீ பரபரக்கத் தொடங்கி விட்டான். 'அப்பாடா, மூன்று வருஷ தவத்துக்குப் பிறகு கடைசியில் அவனுக்கும் விமோசனம் பிறப்பதற்கான வேளை வந்துவிட்டது போலிருக்கிறது.'

ஜன்னல் வழியாகச் சின்னப் பட்சி மாதிரி அந்தக் கார்டு பறந்து வந்து விழுந்தபோது ஏதோ ரசீது என்றுதான் ஸ்ரீ நினைத்தான். அவன்தான் ரிஜிஸ்தர் தபாலில் அடிக்கடி விண்ணப்பங்களை அலுக்காமல் அனுப்பிக் கொண்டே யிருக்கிறானே! அசிரத்தையாக அதை எடுத்துப் பார்த்தவன் அது எங்கிருந்து வந்திருக்கிறது என்பது புரிந்ததும் முகம் மலர்ந்தான்.

'ஆகஸ்ட் ஒன்பதாம் தேதி காலை பத்தரை மணிக்கு அலுவலகத்துக்குச் சான்றிதழ்களுடன் வரவும். பேட்டிக்குச் செல்ல வேண்டிய இடம் பற்றி அப்போது தெரிவிக்கப்படும்' — இந்தப் பழுப்பேறிய அட்டைக்காக, ரத்தினச் சுருக்கமான, உணர்ச்சியற்ற இந்த வாசகத்துக்காக மூன்று வருஷங்கள் அவன் காத்திருந்து சலித்தாயிற்று!

மறுநாள்தான் ஒன்பதாம் தேதி என்று ஞாபகம் வந்ததும் ஸ்ரீ பரபரப்படைந்தான். கஷ்ட காலம், அழுக்கான துணிகளையெல்லாம் காலையில்தான் மூட்டை கட்டிச் சலவைக்குப் போட்டுவிட்டு வந்திருந்தான். இம்மாதிரி சமயங்களுக்கு டெரிலின், டெரிகாட்டன் உடைகள் இருந்தால் எவ்வளவு சௌகரியமாக இருக்கும்! லாண்டரியில் போட வேண்டிய அவசியமே இல்லை. வீட்டிலேயே துவைத்துக் காயப் போடலாம். காற்றுடக் கொஞ்ச நேரத்தில் உலர்ந்துவிடும். காயப்போடும்போது சுருக்கம் விழாமல்



மடிப்பு விழும் இடங்களில் மட்டும் விரல்களால் நீவிவிட்டால் போதும். பெட்டி போட வேண்டிய அவசியம்கூடக் கிடையாது.

இதெல்லாம் விஜயாவுக்கே தெரிந்திருக்க வேண்டாமா? விலை அதிகம்தான். ஆனால் சலவை மிச்சம், நீடித்த உழைப்பு இவற்றில் எல்லாம் அந்த அதிக விலை சரிக்கட்டிக் கொண்டு விடாதா?

அவனிடம் இருக்கிற சட்டைகள், கால் சராய்கள் எல்லாமே சலவைக்குப் போட்டுப் போட்டுக் காலர் ஓரங்களிலும், மடிப்புகளிலும் கிழிசல் கண்டு, பிசிறல் பிசிறலாய் நூல் தெரியத் தொடங்கி விட்டன. ஆனால் 'உத்தியோகத்துக்குப் போகிற இடத்தில் கொஞ்சம் கௌரவமாக இருக்க வேண்டாமா' என்று சாக்குச் சொல்லிக் குறைந்த விலையிலாவது மாதம் ஒரு புடவை வாங்கிக் கொள்ள மட்டும் அவளுக்கு முடிகிறது. அம்மாவும் 'ஆமாமாம்' என்று ஒத்தூதி விடுகிறாள். வேலை, பேட்டி என்று வெளியே போக வேண்டியிருக்கிற அண்ணனுக்குக் குறைந்தபட்சம் ஒரு செட்டாவது கொஞ்சம் பார்வையான உடைகளாக இருக்க வேண்டும் என்று விஜயாவுக்குத்தான் தோன்றவில்லை. அம்மாவாவது அவளுக்குச் சொல்லித் தரக் கூடாதா?

எதற்கெடுத்தாலும் 'உத்தியோகத்துக்குப் போகிற பெண்', 'உத்தியோகத்துக்குப் போகிற பெண்' என்று பரியத் தெரிகிறதே, உத்தியோகத்துக்குப் போக வேண்டிய பிள்ளை என்று அவனுக்கும் சில தேவைகள் இருக்காதா? அது மட்டும் அம்மாவுக்கு ஏன் உறைக்கவே மாட்டேன் என்கிறது? ஆனால் அம்மாவைச் சொல்லியும் குற்றமில்லை. ஆரம்பத்தில் அவனுக்கும் 'புல்' பிடித்துக் கொண்டு தான் இருந்தாள். அவன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நாட்கள் அவை! எதிர் காலம் பற்றிய பிரக்ஞையே இல்லாத உல்லாசமான நாட்கள்......

அவன் கேட்காத சமயங்களிலும் சினிமாவுக்குப் போக அவளாகவே காசு கொடுப்பாள். அவன் கேட்கிற சமயங்களில் கையில் இல்லாவிட்டாலும் எங்கிருந்தாவது கொண்டு வந்து கொடுத்துவிடுவாள். அவனுடைய சொற்ப நேர அற்ப சந்தோஷங்களுக்காகவே குடும்பத்தைச் சிக்கனமாக நடத்தி அவன் தேவைகளைக் கூடுமானவரையில் பூர்த்தி செய்து கொடுப்பதில் கவனமாய் இருந்தவள் அம்மா. தலைப்பிள்ளை. நாளைக்குக் குடும்பத்தைக் கட்டிக் காக்கப் போகிற பிள்ளை. இப்போதே அவனை வாழ்க்கையின் சிரமங்களை உணர வைத்து அவனுக்கு அலுப்பூட்டி விடக் கூடாது என்பதில் மிகவும் எச்சரிக்கையாக இருந்தவள் அம்மா.

அவன் பி. ஏ. தேறி உத்தியோக வேட்டையாடத் தொடங்கியபிறகும் அம்மாவின் கரிசனம் சற்றும் குறையவில்லை. அவன் கேட்ட காசைக் கேட்ட நேரத்தில் எப்படியோ கொடுத்துவிடுவாள். அவனும் அப்படியொன்றும் குடும்ப நிலை தெரியாமல் திரிகிறவன் அல்ல. அவன் வயசிலுள்ள மற்றப் பையன்களுக்கு இருக்கிற என்னென்னவோ பழக்கங்களெல்லாம் அவனை அண்டியதேயில்லை. எப்போதாவது வருகிற நல்ல சினிமாக்களுக்குப் போவான். வாரம் ஒரு முறை ராயர் கடைக்குப் போய் ஓர் இனிப்பு, ஒரு காரம், ஒரு காப்பி பிரியமாகச் சாப்பிட்டுவிடுவான். அவ்வளவுதான்.

வேலை தேடி அலுவலகங்களுக்குப் படையெடுக்கிற நேரங்களில் வழிச் செலவுக்கும், விளம்பரம் பார்த்து விண்ணப்பங்களை அனுப்புகிற போது தபால் செலவுக்கும் தேவைக்கு அதிகமாகவே அம்மா தாராளம் காட்டுவாள்.

''போதும்மா'' என்று அவனே சொன்னாலும், ''பரவாயில்லேடா. வைச்சுக்கோ; வேண்டியிருக்கும்'' என்று திணிப்பாள்.

கொடுத்துக் கொடுத்து அம்மாவுக்கே நாளடைவில் சலித்துப் போயிருக்க வேண்டும். அதிலும் விஜயா சம்பாதிக்கத் தொடங்கிய பிறகு அம்மாவின் கவனம் பெண்ணிடம் போய்விட்டது என்றுதான் கிருக்குத் தோன்றியது.



அவனைவிட நான்கு வயது இளையவளான விஜயா சம்பாதிக்க ஆரம்பித்து விட்டாள். ஆனால் அவன் இன்னும் தனக்கு ஒரு வேலை தேடிக் கொண்டிருக்கிறான். எவ்வளவு பெரிய அவமானம் !

அவன் உத்தியோகம் பார்க்கத் தயாரான வருஷம் தாவணி போட்டுப் பள்ளிக்கூடம் போக ஆரம்பித்திருந்த விஜயா, அந்த வயதிலேயே சுருக்கெழுத்தும் தட்டெழுத்தும் கற்கத் தொடங்கி, எஸ். எஸ். எல். ஸி. தேறிய ஒரே வருஷத்தில் ஒரு வேலையில் அமர்ந்துவிட்டாள்.

விஜயாவுக்கு வேலை கிடைத்துவிட்ட செய்தி அறிந்து, ''இந்தக் காலமே பெண்களுக்குத்தான்டியம்மா. அதுகளுக்கு இருக்கிற சமர்த்தும் சாமர்த்தியமும் பையன்களுக்கு இல்லே'' என்று பக்கத்துவீட்டு அரைக் கிழவி சொன்னதும், ''ஆமாம் மாமி, ஆமாம்'' என்று அம்மா அதற்குத் தலையாட்டியதும் ரவியின் நெஞ்சில் சூட்டைக் காய்ச்சி இழுத்தது.

விஜயா மாதம் இருநூற்றைம்பது ரூபாய் கொண்டு வந்தாள். வீடு கொஞ்சம் கொஞ்சமாய் 'இலேசாய்ச்' செழுமை காண ஆரம்பித்தது. அதே கதியில் விஜயாவுக்கும் மிதப்பு ஏறத் தொடங்கிவிட்டதாகக் ரவிக்குத் தோன்றியது.

அண்ணா என்றாலே முன்பெல்லாம் தலையைக் குனிந்து ஒதுங்கிக் கொள்கிற விஜயா இப்போது எப்படி எதிர்த்து - எதிர்த்துப் பேசுகிறாள் ! தனக்கு மிஞ்சி எதுவும் இல்லை என்கிற மாதிரி எவ்வளவு அதிகப்பிரசங்கித்தனமாக எல்லாம் நடந்து கொள்கிறாள் ! ஆனால் அம்மா அதைச் சிறிதுகூடக் கண்டு கொள்வதே கிடையாது. விஜயா என்ன சொன்னாலும் அவள் இளித்துக் கொண்டு நிற்பாள்.

போதாக் குறைக்கு, 'பாவம், உத்தியோகத்துக்குப் போகிற பொண்ணு, அதுக்குன்னு ஒண்ணு உண்டா ? இந்த வயசிலே எப்படி இருக்க வேண்டிய கொழந்தை இப்படி உழைச்சு உழைச்சுத் தேஞ்சு போறது' என்று வேறு அடிக்கடி புலம்பிக் கொண்டிருப்பாள். 'சுகவரி எப்போ கண் திறக்கப் போறானோ ? இந்தப் பிள்ளையாண்டானும் ஓர் உத்தியோகம்னு போக ஆரம்பிச்சு, நடக்க வேண்டியதெல்லாம் காலா காலத்திலே நடக்கப் போறது எப்பவோ?' என்று இடையிடையே அவன் காதுபடவே குறைப்பட்டுக் கொள்வாள். ரவிக்கு அது பரிதாபமாக இருந்தாலும் அம்மாவின் மீது எரிச்சலாகவும் இருக்கும்.

நல்ல நிலைமையில் இருந்த குடும்பம். அப்பா திடீரென்று காலமாகி அம்மாவைச் சோதித்து விட்டார். அவள் அறிந்து அந்த நாட்களில் அம்மா மனம் தளர்ந்ததேயில்லை, குழந்தைகளை ஆளாக்கி விடும் பணியிலேயே ஓர் ஆவேசத்துடன் மூழ்கியிருந்தவள் அம்மா.

காளை மாதிரி வளர்ந்த பையனை வீட்டோடு வைத்துக் கொண்டு பெண்ணை வேலைக்கு அனுப்பி அவள் கொண்டு வந்து கொடுக்கிற காசில் குடும்பம் நடத்துவது அம்மாவுக்குக் கொஞ்சம் தலை இறக்கமாக இருப்பது ரவிக்குப் புரியாமல் இல்லை. ஆனால் இதற்காக அவள் வாய்விட்டுப் பிரலாபிக்கத் தொடங்கிய பிறகு அவனுக்கு அது தன்னைக் கேவலப்படுத்துவதாகத்தான் தோன்றியது.

அந்த மாதிரி 'சமயங்களில் மட்டுமின்றி எப்போதுமே மௌனத்தில் ஆழ்வது அவனுக்கு வழக்கமாகிவிட்டது. பேச்சு குறைந்து வீட்டில் தங்குகிற நேரம்கூடக் குறுகிவிட்டது. எப்போது கேட்டாலும் 'லைப்ரரி, லைப்ரரி, லைப்ரரி, லைப்ரரி.....' என்ற பல்லவி. சொந்த வீட்டையே நரகமாகக் ரவி மனதார உணரத் தொடங்கி விட்டான்......

அந்த நரகம் சுவர்க்கமாக இல்லாவிடினும் முன்போல் சுமுகமாக மாறுவதற்கான சந்தர்ப்பத்தை வேலைவாய்ப்பு தேடித் தரும் அலுவலகம் அனுப்பி வைத்திருக்கிற அந்த அட்டை தந்திருக்கிறது !

இந்த அட்டைக்காகக் ரவி எவ்வளவு காலம் காத்திருக்க வேண்டியிருந்தது ! பெயரைப்




# மழைகால நோய்களை அண்டவிடாமல் தடுக்க ஹார்லிக்ஸ்.

"ஹார்லிக்ஸின் ஊட்டம் நோய் எதிர்ப்புச் சக்தியை பெருக்கி, நாள்தோறும் ஆரோக்கியத்தைக் காக்கிறது."

—இவ்வாறு சுசித்ராவின் டாக்டர் கூறுகிறார்.



மழை காலத்தில் உடலில் நோய் எதிர்ப்புச் சக்தி குறைவாக இருக்கிறது. அடிக்கடி ஏதாவது ஒரு நோய்க்கு நீங்கள் உள்ளாக நேருகிறது. அதனால்தான், சுசித்ரா, இதர வகைகளில் கவனிப்பதுடன், தன்னுடைய குடும்பத்தினருக்கு தினமும் **ஹார்லிக்ஸ்** தந்து அவர்களுக்கு நோய் ஏதும் வராமல் பார்த்துக் கொள்கிறாள்.

சுசித்ராவின் டாக்டர் **ஹார்லிக்ஸை**யே சிபாரிசு செய்கிறார். ஏனெனில், நோய் எதிர்ப்புச் சக்தியை வளர்க்கு, உடல் நலத்தை நாள் தோறும் காக்கும் ஊட்டமுள்ள சத்து **ஹார்லிக்ஸில்** நிறைந்து இருக்கிறது.




## முழுமையான ஊட்டம்பெற ஹார்லிக்ஸ்

'ஹார்லிக்ஸ்'— ஒரு பதிவு பெற்ற ட்ரேட்மார்க்

HMM-3206A-T3

பதிந்து கொண்ட மறு வாரமே அழைப்பு எப்போது வரும் என்று அவன் விசாரிக்கத் தொடங்கிவிட்டான்.

''இன்னு தம்பி நீ. உனக்கு முன்னாடி பேரு பதிஞ்சவங்களே மூணு வருஷமா காத்துக்கிட்டிருக்கும்போது அதுங்காட்டியும் உனக்கு 'இன்டர்வியூ கார்டு' வந்துடுமா? ஒழுங்கா 'ரினியூ' பண்ணிக்கிறது இரு. சீனியாரிட்டி பிரகாரம் ரெண்டு வருஷங்கள் பொறுத்துக் கார்டு வர ஆரம்பிக்கும்'' என்று வேலை வாய்ப்பு தேடித் தரும் அலுவலகத்தில் இருக்கிற மொட்டைத் தலை சேவகன் சொன்ன போது கிரிக்குச் 'சப்'பென்றாகிவிட்டது.

கடைசியில் அந்த மொட்டைத் தலையன் சொன்னபடிதான் நடந்திருக்கிறது. அவன் சொன்னதற்கும் ஒரு வருடம் அதிகமாகவே கழிந்த பிறகு முதல் தடவையாக வேலை கிடைக்க வாய்ப்பு ஏற்படுத்தித் தருவதாக அவனுக்கு அழைப்பு வந்திருக்கிறது!

பேட்டிக்கு எதை உடுத்திக் கொண்டு போவது? கொஞ்ச நேரத் தவிப்புக்குப் பிறகு மனம் தெளிந்தது. அடுத்த வீட்டு ரங்கனிடம் ஒரு செட் துணி இரவல் வாங்கிக் கொள்ளலாம். ரங்கன் ஆப்த நண்பன். வசதியானவன். அவனிடம் கேட்கத் தயங்க வேண்டியதில்லை. ரங்கனுக்கும் அவன் வயதுதான். ஆனால் அவனைவிடக் கொஞ்சம் உயரம்; பருமனும் கூட. எப்படியும் ரங்கனின் உடைகளைக் கொண்டே சமாளித்துவிடலாம்.

இரவு முழுக்கக் கிரி தூங்கவேயில்லை. எந்த அலுவலகத்துக்குப் போகச் சொல்வார்கள்? அங்கே பேட்டியில் என்னென்ன கேட்பார்கள்? எப்படியும் நாலைந்து ஸ்தானங்களாவது காலியாக இருக்கும். அதில் ஒன்றைத் தனக்குக் கொடுத்தே தீரவேண்டும் என்று பேட்டிக்குக் கூப்பிடுகிறவர்களுக்குத் தோன்றும்படி அவன் நடந்து கொள்ள வேண்டும் — இரவெல்லாம் அவனுக்குத் தூக்கம் வரவேயில்லை....

**ம**று நாள் பொழுது விடிந்ததுமே கிரி புறப்பட்டுவிட்டான்.

''பத்தரை மணிக்குத்தானேடா எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்சிலே இருக்கணும்? அதுக்குள்ள எதுக்கு அவசரப்படறே? சாதம் வடிச்சாச்சு, கொஞ்சம் பொறு. ரசத்தை இறக்கிடறேன். சாப்பிட்டு விட்டே போயிடலாம்'' என்றாள் அம்மா.

''வேண்டாம்மா. எதுக்கும் சீக்கிரமாவே போயிடறேன். வந்து பார்க்கலாம்.''

அம்மா சும்மா இருந்து விடவில்லை. முதல் நாள் மீந்த தோசை மாவில் கொஞ்சம் ரவையைப் போட்டுக் குண்டாக ஓர் ஊத்தப்பம் சுட்டுக் கொடுத்தாள். புளித்த மாவு; ஒன்றுக்கு மேல் காணவில்லை. அவசரமாகப் பிட்டுப் போட்டுக் கொண்டு எழுந்தான்.

''இந்தாடா.'' — அம்மா இரண்டு ஒற்றை ரூபாய் நோட்டுக்களை நீட்டினாள். வழிச் செலவுக்கு.

''ஒரு ரூபாய் போதும்மா.''

''பரவாயில்லேடா. எதுக்கும் கையோட காவலா இருக்கட்டும். சாப்பிடாம வேறே போறே; பகவான் புண்ணியத்திலே இந்தத் தடவை நீ ஆர்டரோடு வரணும்.''



''400 கோடி ரூபாய்க்கு நமது மத்திய அரசு சிக்கனம் பிடிக்கப் போகுதாம்.''

''அது எப்படி நடக்கும் தெரியுமா? சிக்கன நடவடிக்கை ஆலோசனை கமிட்டி நியமித்து, அது கூடுவதற்காக நாலு லட்ச ரூபாய் செலவில் நாலு மாடிக் கட்டிடம் ஒன்று கட்டி, அதில் பணியாற்ற நானூறு உயர் அதிகாரிகளுக்கும் புதிதாய் வேலை தந்து, அவர்கள் குடியிருப்புக்காக வீடுகள் கட்டி.....''

''வேண்டாம்மா, எனக்கு ஒரு ரூபாயே போதும்.'' — ஒற்றைத் தாளை மட்டும் வாங்கிக் கொண்டு புறப்பட்டான்.

வேலை வாய்ப்பு தேடித் தரும் அலுவலகத்துக்கு வந்தபோது கிரிக்கு மலைப்புத் தட்டியது. அவன் மாதிரி அழைப்பு வந்தவர்களே இருநூறு பேர் இருந்தார்கள். புதிதாகப் பெயரைப் பதிந்து கொள்ள வந்தவர்களின் கூட்டம் வேறு. அலுவலக வராந்தாவில் நிற்கக்கூட இடமில்லை. வெளியே வந்து ஒரு மரத்தடியில் நின்று கொண்டான்.

வெப்பம் சிறிது சிறிதாக அதிகரித்தது. அடிக் காற்று அடிக்கொரு தரம் குப்பையையும் வாரி வீசியது. இரவல் வாங்கிப் போட்ட சட்டையும் கால்சராயும் பாந்தமாகவே இல்லை. அதிலும் கால்சராய் அதிக உபத்திரவம் கொடுத்தது. மெதுவாக அது இடுப்பிலிருந்து நழுவுவதுபோல் அடிக்கடி பிரமை தட்டியது.

திடீரென்று ஒரு லாரி சிமிட்டி மூட்டைகளை ஏற்றிக் கொண்டு அசுர வேகத்தில் அவனைக் கடந்து சென்றதில் அவன் முகம் முழுதும் புழுதி அடித்தது. கைக்குட்டையை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டான். வியர்வையும் புழுதியும் சேர்ந்து காவிக்கறையாக அதில் படிந்தன.

நேரம் ஆக ஆக வயிறு பசிக்கத் தொடங்கியது. பக்கத்தில் இருந்த டீக்கடைக்குப் போய் இரண்டு பிஸ்கோத்துகளும் டீயும் சாப்பிட்டுவிட்டு வந்தான்.

அவன் முறை வந்து வேலை வாய்ப்பு தேடித் தரும் அலுவலகத்திலிருந்து புறப்படும்போது மணி பன்னிரண்டுக்கு மேல் ஆயிற்று. சேப்பாக்கத்தில் இருக்கிற அரசாங்க அலுவலகம் ஒன்றில் நான்கு குமாஸ்தா ஸ்தானங்கள் காலியாக இருக்கின்றனவாம். அந்த நான்கு இடங்களுக்கு அவனையும் சேர்த்து நாற்பது

> பணத்தின் மதிப்புக் குறையும் வேகத்தைப் பார்த்தால் பாலிஸி முடிந்து இன்ஷ்யூர் செய்தவர்கள் பணம் வாங்கும்போது அதன் மதிப்பு ரொம்பக் குறைந்திருக்கும். இதை ஈடுகட்ட எல். ஐ. ஸி. முன்வரவேண்டும். மேல்நாடுகள் சிலவற்றில் இம்முறை அமுலில் இருக்கிறது. அதாவது ஆயுள் இன்ஷ்யூர் செய்யப்படும்போது கூடவே அந்நாட்டின் பண மதிப்பும் இன்ஷுர் செய்யப்படுகிறது. மதிப்புக் குறையுமேயானால் பாலிஸிதார் பாதிக்கப்படுவதில்லை.
>
> ஆதாரம்: ஸ்டேட்ஸ்மன் கடிதம் - பாலி

பேர்களுக்கு மேல் சேப்பாக்கத்துக்குப் படையெடுத்தார்கள்.

அவர்கள் சேப்பாக்கம் அலுவலகத்துக்குப் போய்ச் சேரும்போது அங்கே சாப்பாட்டு நேரமாகிவிட்டது. வெறும் மேஜை நாற்காலிகளும், பைல்களும் மட்டும் மின்விசிறியின் கீழ் காற்று வாங்கிக் கொண்டிருந்தன.

வேலை தேடி வந்தவர்கள் சிறு சிறு கும்பல்களாக வாயிற்புறத்தை அடைத்துக் கொண்டு நின்றார்கள்.

''ஒரு பக்கமா போயி நில்லுங்க....இப்பிடி கூட்டம் போடக் கூடாது. ஒதுங்கிப் போங்க; அதிகாரி வர்ற நேரம்'' என்று டவாலிச் சேவகன் அடிக்கடி அதிகாரம் செய்து அங்கே தனக்கு இருக்கிற முக்கியத்துவத்தை அவர்களுக்கு உணர்த்திக் கொண்டிருந்தான். குமாஸ்தாக்கள் ஒவ்வொருவராக இருக்கைக்குத் திரும்பிய பிறகு சேவகன் அவர்களின் பெயர்ப் பட்டியலை வாங்கிக் கொண்டு உள்ளே போனான். அதிகாரி வரும் வரை அவர்கள் காத்திருக்க வேண்டுமாம்.

கிரி யாரோடும் ஒட்டாமல் தனியாக வெளித் தாழ்வாரம் வழியே அந்த அலுவலகத்தைச் சுற்றி வந்தான். ஒரு வாசலை அவன் மெதுவாகக் கடந்து சென்றபோது, ''அட, கிரியா?'' என்று ஒரு குரல் அவனைத் தடுத்து நிறுத்தியது.

இவள்..... நிர்மலா அல்லவா இவள் ?

''நிர்மலாவா?'' என்றான் கண்கள் விரிய.

நிர்மலா சிரித்துக் கொண்டே அருகில் வந்தாள். ''நான் இங்கேதான் இருக்கேன் கிரி. ஹெட்கிளார்க். ரொம்ப நாளாச்சு உன்னைப் பார்த்து. நீ எங்கே இருக்கே? எங்கே இவ்வளவு தூரம்?''

''இங்கே குமாஸ்தா வேலை காலியா இருக்காமே? இன்டர்வியூவுக்கு நாங்க நாற்பது பேர் வந்திருக்கோம். எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்சிலேயிருந்து அனுப்பி வைச்சிருக்காங்க, நிர்மலா.''

''ஓ, இன்னும் உனக்கு வேலை எதுவும் கிடைக்கலியா கிரி ?'' என்றவள் ஒரு நிமிட மௌனத்துக்குப்பின் ''வெறும் லீவு வேகன்சி தான் அதெல்லாம்..... ஒண்ணரை மாசங் கூடத் தக்காது'' என்றாள் சுரத்தில்லாமல்.

''அதைத்தான் சொல்லேன். ஒண்ணரை மாசம்னு ஒண்ணரை மாசம் வேலை பார்த்தோம்னு இருக்குமே!'' என்று சிரித்தான் கிரி.

''சரி. அப்புறமா பார்க்கலாம். நிறைய வேலை இருக்கு. வரட்டுமா ?'' என்ற நிர்மலா அவனுடைய பதிலுக்குக்கூடக் காத்திராமல் வேகமாகத் திரும்பிப் போனாள்.

அவள் உடம்பை நெளித்துக் கொண்டு போவதையே பார்த்துக் கொண்டிருந்தான் கிரி. அவனோடு படித்தவள் அவள். கல்லூரியில் படிக்கிற நாட்களில் அவனிடம் என்ன குழை குழைவாள்.... அந்த நிர்மலா இப்போது ஒரு ஹெட்கிளார்க்!

உள்ளே சென்ற நிர்மலா எவனோ ஒருவனிடம் அரட்டை அடிக்கத் தொடங்கியதையும், அவன் ஏதோ சொல்ல, குலுங்கிக் குலுங்கிச் சிரிப்பதையும் பார்த்தான் கிரி. வெறுப்புடன் மெல்ல அங்கிருந்து நகர்ந்தான் அவன்.

''இன்னா சார், ஒணும்?'' — ஒரு சேவகன் அவனை வழிமறித்தான்.

''இன்டர்வியூவுக்கு வந்தேம்பா....''

''அப்ப வெளியிலே போய் இருங்க சார், உள்ளாற எல்லாம் இப்பிடிச் சுத்திக்கினு இருக்கக் கூடாது.''

கிரி தலை குனிந்துகொண்டு விரைவாக வந்த வழியே திரும்பி மற்றவர்களுடன் நின்று கொண்டான்.

ஒரு வழியாகப் போட்டி நடந்தேறி முடிவு தெரிவதற்கு மணி நான்கு ஆகிவிட்டது. வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட நால்வரின் பெயர்களைப் படித்தார்கள். அதில் கிரியின் பெயர் இல்லை.

கிரி குனிந்த தலை நிமிராமல் அங்கிருந்து கிளம்பினான்.

''இன்டர்வ்யூவுக்கு வந்தீங்களா பிரதர்?'' சிகரெட் பிடித்தவாறு எதிரே வந்த ஓர் இளைஞன் விசாரித்தான். அதே அலுவலகத்தில் வேலை பார்க்கிறவன் போலிருந்தது.

''உம் !'' என்று அசுவாரசியமாக முனகினான் கிரி.

''எல்லாம் சுத்த ஹம்பக் பிரதர். நாலு இடங்களுக்கும் நேத்தே ஆள் எடுத்தாச்சு. ரெண்டு இடம் மந்திரி சிபாரிசு. ஒண்ணு எம். எல். ஏ. சிபாரிசு. மிஞ்சின ஒண்ணுக்கு அதிகாரி தன்னோட சொந்தக்காரப் பையன் ஒருத்தனைப் போட்டாச்சு. ஆனால் சட்டப் பிரகாரம் இதைச் செய்தாகணுமே........ எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்சுக்குச் சொல்லி அவங்க ஆளுங்களுக்குக் கார்டு அனுப்ப வைச்சு அவங்களோட கூடவே இன்னும் நிறைய பேருக்கும் அதே மாதிரி இன்டர்வியூ கார்டு கொடுத்து இங்கே அனுப்பி வைக்கச் சொல்லிக் காரியத்தை முடிக்கிறாங்க.... இன்டர்வ்யூவுக்குப் பலபேரை வரவழைச்சு அவங்கள்ளேயிருந்து ஆளுங்களைத் தேர்ந்தெடுக்கறாங்கன்னு ஊர் நம்பணுமாம்..... சுத்த ஹம்பக்!''

கிரி பதில் சொல்லவில்லை.

''லேசா இருந்தாலும் பரவாயில்லே, பிரதர். கொஞ்சம் பார்வையா, பிரியா கடாவுறும் இருந்துட்டா போதும். எப்படியாவது வேலை கிடைச்சுடும். நமக்கெல்லாம் எதுனாச்சும் சிபாரிசு இருந்தாலொழியப் பிரயோசனமில்லே, பிரதர் !'' என்று வக்கிரமாகச் சிரித்தான் அவன்.

கிரிக்குச் சட்டென்று நெஞ்சில் ஓர் உதை விழுந்த மாதிரி இருந்தது.

மூன்று வருஷங்களாக அவன் வேலை தேடிக் கொண்டு அலைகிறான். ஆனால் அவன் தங்கை விஜயா மட்டும்.....

'சீ, நான் ஒரு வடிகட்டின முட்டாள். சம்பந்தா சம்பந்தமில்லாமல் விஜயாவைப் பற்றி எதற்காக இப்போது நினைத்துக் கொள்கிறேன் ?'

கிரி அவனிடம் விடை கோருவதுபோல் சிரித்துவிட்டு பஸ் ஸ்டாப்பை நோக்கி வேக மாக நடந்தான்.

பஸ்ஸுக்காக நிழலோரத்தில் அவன் காத்து நின்ற போது அவனுக்குப் போட்டி யாக ஒரு தெரு நாய் அந்த நிழலடிக்கு வந்து பதுங்கியது. கிரி அதைக் குனிந்து பார்த்தான். நாய் நாக்கை வெளியே தள்ளிக் கொண்டு மூச்சிரைக்க அவனைப் பரிதாபத் துடன் அண்ணாந்து பார்த்தது. கிரி பேசாமல் இருந்தான். நாய் சற்றுத் தைரியமடைந்து அவனை இன்னும் நெருங்கித் தன் உடல் முழுவதையும் நிழலுக்குக் கொண்டு வந்தது.

கிரி திடீரென்று தன் வலக்காலைப் பின் னுக்கு இழுத்து அதன் வயிற்றில் ஓங்கி உதைத் தான். இந்த எதிர்பாராத தாக்குதலைத் தாங்கமாட்டாமல் நாய் ஓலமிட்டவாறு எகிறி விழுந்து உடனே வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து தலைதெறிக்க ஓடியது.

கிரி சிறிது நிம்மதியடைந்தவன் போல் பஸ் வருகிறதா என்று பார்க்கத் தொடங் கினான். வழக்கத்துக்கு விரோதமாகக் கடற் கரைச்சாலை வெறிச்சோடிக் கிடப்பதுபோல் பட்டது அவனுக்கு. அவனுடைய பஸ் வரா விட்டாலும் இந்நேரம் வேறொரு பஸ்கூடவா வராது போய்விடும் ?

கிரி மனம் குழம்பிக் கொண்டிருக்கையில், சாலை ஓரமாகச் சைக்கிளை மிதித்துக் கொண்டு வந்த ஒருவன் அவனைப் பார்த்து ஏதோ கூவிக் கொண்டே பறந்தான்.

''பஸ் வராது சார்....! பைகிராப்ட்ஸ் ரோடண்டே கலாட்டா.... பசங்க பஸ்ஸுங்களையெல்லாம் வழி மறிக்கிறாங்க.''

கிரி இனம் புரியாத ஆர்வத்துடன் பைக் கிராப்ட்ஸ் சாலையை நோக்கி விரைந்தான்.

கண்ணகி சிலை எதிரில் நட்ட நடுச்சாலை யில் ஒரு சிவப்பு நிற பஸ் காலியாக நின் றிருந்தது. அதைச் சுற்றிப் பெருங் கூட்டம். பெரும்பாலும் பையன்கள்தான். மாண வர்கள், அல்லது மாணவப் பருவம் கடந்த இளைஞர்கள். அவர்களில் பலர் கிரியைப் போலவே அநீதிகளுக்கும் ஏமாற்றங்களுக்கும் உள்ளானவர்கள். எதிர்காலம் சூன்யமாய் இருக்கக் கண்டவர்கள். உழைக்கவும் ஊதி யம் பெறவும் உள்ள உரிமைகள் மறுக்கப்பட் டதால் உசுப்பி விடப்பட்டவர்கள்.

''உடாதீங்க.... சும்மா உடாதீங்க'' என்று அவர்களில் ஒருவன் சாமியாடிக் கொண்டிருந்தான்.

நடைபாதை ஓரத்தில் ஆண்களும் பெண் களுமாய்ப் பலர் திகைத்து நின்றார்கள். அவர்கள் அந்தப் பஸ்ஸில் வந்த பயணி களாக இருக்க வேண்டும்.....

திடீரென்று எங்கிருந்தோ ஒரு கல் விண் ணென்று பறந்து பஸ்ஸின் முன்புறக் கண் ணாடியைச் சிதறடித்தது. அதைத் தொடர்ந்து சொல்லி வைத்தாற்போல் சர மாரியான கல் வீச்சு !

கிரிக்கு நாடி நரம்பெல்லாம் முறுக்கேறு கிற மாதிரியிருந்தது. என்ன நடந்ததென்று விசாரிக்க வேண்டுமென்றுகூட அவனுக்குத் தோன்றவில்லை. ஆவேசத்துடன் கூட்டத்தை நெருங்கினான். காலடியில் வந்து விழுந்த கல்லொன்றைப் பொறுக்கி வெறி பிடித்தாற் போல் பஸ்ஸின்மீது வீசினான். அது குறி தவறி பஸ்ஸுக்குப் பின்னால் எங்கோ விழுந்தது.

'' கொளுத்துங்கடா !'' என்று எவனோ கூச்சலிட்டான்.

கிரி கண்கள் மின்னக் குரூரமான உற்சா கத்துடன் பஸ்ஸை மேலும் நெருங்கினான்.

அடுத்த விநாடி அந்தப் பஸ்ஸின் பின் புறத்திலிருந்து புகையும் நெருப்புமாக ஒரு தீப்பிழம்பு குபுக்கென்று மேலே எழும்பியது.

''போலீஸ்... போலீஸ்... ஓடுங்கடா!''

அந்தக் கணமே பஸ்ஸைச் சூழ்ந்து நின்ற கும்பல் தனி நபர்களாகப் பிரிந்து சிதறி ஓடியது.

தபதபவென்று போலீஸ் கால்கள் தரையில் மிதிபடும் சத்தம்... விசில் ஒலி... கிணு கிணு என்று தியனைக்கும் வண்டியின் ஓசை...

''ஓடுங்கடா'' என்ற எச்சரிக்கை கேட்ட துமே கிரியும் தன்னை மறந்த வேகத்தில் ஓடத் தொடங்கியிருந்தான். எங்கே போகி றோம் என்ற உணர்வின்றி அவன் ஓடினான்.

வெகுநேரம் ஓடியபின், தனக்குப் பின்னால் ஓசைகள் எல்லாம் அடங்கி இனிமேல் ஆபத்து எதுவும் இல்லை என்று நிச்சயமானபோது கிரி ஓட்டத்தை நிறுத்தித் திரும்பிப் பார்த்தான்.

தொலைவில் கண்ணகி சிலை எதிரே ராட் சதன் சிதை மாதிரி அந்த பஸ் நீளமாக எரிந்து கொண்டிருந்தது.

**ரேகா** அனந்த் பாய் ★ ராம்வாயீகர்











# பலாக் கனி

அன்று வெள்ளிக்கிழமை. செல்லக் கிளி, கடலில் பாதி கடம்பா எனப் புகழ் படைத்த அவனுடைய ஊர்க் குளத்தில் குளிப்பதற்காகப் பசுமையான முழு மஞ்சள் ஒன்றையும், தண்ணீர் கொண்டு வருவதற்காகச் செப்புக் குடம் ஒன்றையும் எடுத்துச் சென்றாள்.

அப்பொழுது வானம் தன் இருட் போர்வையை நன்கு களையவில்லை. குமரிப் பெண்கள்; வரிசையொன்று குளத்தில் குளித்துவிட்டு ஈரப் புடவைகள் 'சடக் சடக்' என்று பறவை இறக்கைகள் போல் அடித்துக் கொள்ள வீட்டை நோக்கித் திரும்பிக்கொண்டிருந்தது.

குருத்து மணலினால் செப்புக் குடத்தை வெளுக்கத் தேய்த்துக் கழுவி, கழுத்தளவு தண்ணீரில் போய் ஒரு குடம் தண்ணீர் எடுத்துக் கரையில் வைத்தாள். தன்னுடைய பதினாறு முழம் சேலையையும், ஒரு ரவிக்கையையும் சோப்புப் போடாமல் வெறுமனே கருங்கல்லில் அடித்துத் துவைத்துப் பிழிந்து கொண்டாள். தண்ணீரினுள் நன்கு அழுத்தி முங்கித் தலையைக் கசக்கி, வெறும் கையால் உடம்பைத் தேய்த்துக் குளித்துக் கொண்டாள். கரையேறிய சமயம், கொண்டு வந்திருந்த முழு மஞ்சளைக் கல்லில் உரைத்தாள்.

உரைத்த மஞ்சள் விழுதைக் கிழக்குப் பக்கமாக நின்று தன்னுடைய தாலிக் கொடியை எடுத்து அதில் உள்ள திருச் சின்னத்துக்குப் பக்திபூர்வமாக இறைவனை நினைந்து தடவிவிட்டு, தன்னுடைய நெற்றியிலும் கன்னங்களிலும் பளீரென்று தடவிக் கொண்டாள்.

குளத்தங்கரைச் சாலையைக் கடக்கும் வரையில் ''பிள்ளையாரப்பா, பிள்ளையாரப்பா!'' என்று வாய்க்குள் விநாயகப் பெருமானின் திருநாமத்தை உச்சாடனம் பண்ணிக் கொண்டு, கிழக்கு முகமாகக் கம்பீரமாக வீற்றிருந்த அவ்வூர்ப் பிள்ளையாரப்பனை வந்தடைந்து ஒரு கும்பிடு போட்டாள்.

கர்ம சிரத்தையாகச் சுமந்து வந்த தண்ணீரைக் கோயில் கர்ப்பக் கிரகத்துக்கு வலப் புறமாகக் கொஞ்சம் தள்ளி யிருந்த அரச மரத்தினடியில் உள்ள சிமெண்டு மேடையில் கொலு வீற்றிருந்த நாகக் கடவுளுக்கு வார்த்துவிட்டு, ''ஐயனே! என் குறை தீரப்பா!'' என்று சற்று உரக்கவே ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டாள்.

அவளும், ஒன்றிரண்டு என்ற எண்ணிக்கையையும் கடந்து • பல வருடங்களாக இங்ஙனமே பொறுமையின் பூஷணமாகக் கோயிலை வலம் வரத்தான் செய்கிறாள்.

அவள் வசித்த ஊர், அளவில் சின்னதாக இருந்தாலும் கொழும்புத் தேட்டு என்று அங்கிருந்து இலங்கை சென்றுள்ள ஜனங்கள் ஏராளம். பராபரியாக அவள் கணவனைப் பற்றிய செய்தி அவள் காதில் விழுந்த வண்ணமாகவே இருந்தது.

செல்லக்கிளியைக் கைப் பிடிப்பதற்கு முன்பு கதிர்வேல் பெருமதிப்பாகப் பிரபலமான துறையில் கொழும்பில் ஒரு ஜவுளிக் கடையே நடத்திக் கொண்டிருந்தான் என்று ஒரு வதந்தி. கல்யாணத்துக்கு அப்புறம்தான் அதன் வெளிச்சம் நன்கு தெரிந்தது. அக் கடையில் அவன் ஒரு பணியாள் என்ற விவரம் வெளிவந்தது.

வண்டி வண்டியாக அரிசியும் நெல்லுமாகச் சீதனத்துக்குக் கப்பல் போல் கொண்டு வந்த செல்லக் கிளிதான் இப்போது தன் பிழைப்புக்கே கைவிரல்கள் கன்னத் தென்னந்தட்டி முடைந்து கொண்டிருந்தாள்.

இன்றும், அன்று நடந்த நடப்பை நினைக்கும் பொழுது இன்று நடந்தது போலிருந்தது அவளுக்கு. ஆம்! தோள் அளவு நீண்ட வடிகாது அவளுக்கு. அக்காதுகளில் மாங்கனி போல் கொத்துக் கொத்தாக நகைகள் அசைந்தாடிக் கொண்டிருந்தன.

ஒரு நாள் மாலை நேரம் அவள் கணவன் அவளிடம் மெல்ல, ''செல்லக்கிளி! நீயும் நானும் இன்னும் இரண்டு மாதங்களிலே கொழும்புக்குப் போகப் போகிறோம். அதற்குள் உன் காதை அறுத்துக் கம்மல் காதாக்கி நாகரிகம் பண்ணிவிடலாம்'' என்றான்.

அவளுக்குக் கல்யாணம் ஆகிச் சரியாக அப்பொழுது இரண்டு மாதங்கள்கூட ஆகியிருக்கவில்லை. மாமனார் மாமியாரிடம் யோசனை கேட்கலாம் என்ற எண்ணத்தில், மாமியார் தனித்திருக்கும் நேரம் பார்த்து, ''அத்தை! உங்க மகன் என் காதை அறுத்துக் கம்மல் காதாக்கிக் கொழும்புக்குக் கூட்டிக்கிட்டுப் போகிறேன்னு சொல்றாங்க. உங்க விருப்பம் என்ன அத்தை?'' என்று மெதுவாக இழுத்தாள்.

''என்னமோம்மா! அவன் நடப்பு ஒண்ணும் எனக்கு விளங்கலே. எப்பவும் அவன் ஒரு சிறுப்பட்டைதான். காலையிலே போய் வயல்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு வாடான்னு

ங்களம்

சிராஜன் -



கண்ணாடி ஒண்ணை வைச்சிக்கிட்டுப் பொம்பளை மாதிரி சீவிச் சிங்காரிப்பான். அது பொறுக்க மாட்டாம உங்க மாமா சத்தம் போட்டதுக் குத்தான் சொல்லாம கொள்ளாமல் கள்ளத் தோணி ஏறிக் கொழும்புக்குத் தேடப் போனான். இப்ப வந்திருக்கான்'' என்று தன் மகன் நடப்பையெல்லாம் மருமகளும் அறிந் திருக்கட்டும் என்ற நினைப்பிலோ அல்லது வீட்டுக்கு விளக்கேற்றத்தான் ஒருத்தி வந்து விட்டாளே என்ற மெத்தனத்திலோ மகன் குட்டை எல்லாம் உடைத்துவிட்டாள்.

என்ன செய்வது! பெரிய பிடவு என்று ஊர் விட்டு, ஊர் கடந்து பத்து மைல் கணக் கில் ரொம்பத் தூரத்தில் வந்து வாழ்க்கைப் பட்டு விட்டாள். மரமோ மட்டையோ மணாளன் என்று ஒருவன் வாய்த்துவிட் டான்; இனி எது வந்தாலும் படவேண்டியது தான் என்று கல்யாணமாகி இரண்டு மாதங் களுக்குள் ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டிருந் தாள் செல்லக்கிளி.

டாக்டரை அழைத்து வந்து வடிந்த காதையும் அறுத்துக் கம்மல் காதாக்கியப் புறம்தான் சும்மா இருந்தான் அவனது கணவன் கதிர்வேல்.

கழுத்தில் வடம் வடமாகப் போட்டிருந்த நகைகளை, ''கொழும்பிலுள்ள சிங்களவப் பெண்களெல்லாம் மெல்லியதாக ஒரு செயின்தான் போட்டிருப்பார்கள். அது தான் பார்க்க நன்றாக இருக்கும்'' என்று கழற்றச் சொல்லி டிரங்குப் பெட்டிக்குள் மூட்டை கட்டி வைத்து விட்டான்.

நடந்து போனவற்றையெல்லாம் நினைக்க நினைக்கச் செல்லக்கிளிக்கு அழுவதா சிரிப் பதா என்று ஒன்றும் தோன்றுது. கருமமே கண்ணாகத் தென்னந் தட்டி முடைவதில் மெயில் வேகத்தில் மும்முரமாக ஈடுபட்டு விடுவாள் அவள்.

கதிர்வேல் செல்லக்கிளியின் நகையை மட்டும் 'அபேஸ்' பண்ணவில்லை; அவளது சொத்து என்று குடியிருக்கும் மாடி வீட்டைத் தவிர ஒரு காணி நிலம்கூட விட்டு வைக் காமல், வயல்களை அடமானத்துக்கு வைத்துச் சந்தடியில்லாமல் ரூபாயை வாங்கிக் கொண்டு போயே விட்டான் கொழும்பை நோக்கி.

மகனது செய்கையால் மனம் இடிந்து போன தாய் காலனை அவளாகவே தேடிக் கொண்டாள்.

உதவாக்கரையான ஒரே பிள்ளையைப் பெற்றுவிட்டு மருமகளின் சம்பாத்தியமே கதியாக இருந்த அவளுடைய மாமனாரும் சில நாளைக்கெல்லாம் கண்ணை மூடிவிட்டார்.

தன் உழைப்பினால் பாடுபட்டுச் சாப்பிட்டுக் கணிசமான தொகை சேர்த்து நிலத்தையும் அடமானத்திலிருந்து அவள் மீட்டிருந்தாள்.

வறுமையில் அடிபட்டு மரக்கட்டையான உடலும், துன்பம் என்னும் விளைவில் முதிர்ச்சியுற்று வைரம் பாய்ந்த மனமுமாக இருந்தாலும் செல்லக்கிளி தன் நம்பிக்கையை மட்டும் தளர விடவில்லை.

தன்னைத்தேடித் தெற்குத் தெரு கணேசன் வரவே, ''வாங்க ! வாங்க!'' என்று வந்தவரை வரவேற்றாள்.

தெற்குத் தெரு கணேசன் அவளுடைய கணவனுக்கு நெருங்கிய பால்யத் தோழர். இருபது வருடங்களாக அவ்வூரில் அவள் படும் பாட்டைக் கண்டு பச்சைக் கண்ணீர் விடும் உயர் மனிதர்களில் அவரும் ஒருவர் என்பது அவள் அறிந்ததுதான். ஏதாவது முக்கிய விஷயம் இருந்தாலன்றி, சாதாரணமாக அவளைத் தேடி வரமாட்டார்.

எனவே, இன்று அவர் அவள் வீட்டைத் தேடி வந்தவுடன், ''என்னங்க ! என்ன விசேஷம் ?'' என்றாள்.

''எல்லாம் நல்ல விஷயம்தான். நம்ம கதிர்வேல் இலங்கை அகதியாகச் சென்னை வந்துள்ளான். இராத்திரி ரயிலுக்கு வரப் போறேன்னு எனக்குக் கடிதம் போட்டிருக்கிறான். அவனைப் போய் நம்ம ஊர் ரயிலடியிலே நீதான் அழைச்சிக்கிட்டு வரணும். இவ்வளவு நாட்களும் உன்னைக் கவனியாது இருந்துவிட்டு, இப்போ திடீர்னு 'ரயிலடிக்கு வா'ன்னு உனக்குக் கடிதம் போட்டால் நம்ப மாட்டியேன்னுதான் எனக்குக் கடிதம் போட்டு உனக்குத் தெரிவிக்கச் சொன்னான்.''

கணேசன் மொழிந்த வார்த்தைகளைக் கேட்ட செல்லக் கிளியின் நெஞ்சம் வியப்பும் மகிழ்ச்சியும் கலந்த விவரிக்க முடியாத ஆனந்த நிலையை அடைந்தது.

ஒருவாறு நினைவைச் சமனப்படுத்திக் கொண்டு, ''அங்கே அவங்களோடு இருக்கிற குடும்பமும் வருமில்லையா? அதைப் பற்றி உங்களுக்கு ஏதாவது விஷயம் தெரிவிச்சிருக்காங்களா?'' என்று முதல் முறையாகத் தன் கணவனைப் பற்றிய விகல்பமான விஷயத்தை அன்னிய மனிதரிடம் விசாரித்தாள்.

''அதைத்தான் எப்படிச் சொல்றதுன்னு திணறிக்கிட்டிருந்தேன் ; நீயே கேட்டுட்டே, பிடி எடுத்துக் கொடுத்தாப்பிலே. எனக்கு ரொம்ப நல்லதாப் போச்சு. அதைப் பற்றி உன் விருப்பம்தான் என்ன?'' என்று கேட்டுக் கொண்டு அவள் முகத்தைத் தெய்வ சந்நிதியில் நின்று பார்ப்பதுபோல் திட்சண்யமாகப் பார்த்தார் கணேசன்.

''எல்லோரும் இங்கே வருவதைப் பற்றி எனக்கு ஒண்ணும் ஆட்சேபணையில்லை. மறுபடியும் அவங்க ஊர் எல்லையை மிதிக்கிறதைப் பார்க்க அத்தையும் மாமாவும் இல்லையேன்னு பெரியவங்க ரெண்டு பேரையும் நினைத்துத் தான் சங்கடப்படுகிறேன். மற்றப்படி ஒண்ணும் இல்லை'' என்றாள்.

ரயிலடியில் ரயில் வந்து நின்றது. பஞ்சாயத்து விளக்குகள் இருந்தும் ரயிலடி இருள் கப்பிக் கொண்டுதான் இருந்தது. முன் எச்சரிக்கையாகப் பக்கத்து வீட்டுச் சொர்ணத்துக்கிட்டேயிருந்த மூணு கட்டை 'டார்ச்லைட்' ஒன்றை வாங்கி வந்திருந்தாள்.

'திக் திக்' என்று நெல் இயந்திரமாக இதயம் அடித்துக் கொள்ள வந்த கதிர்வேல் ரயிலடியில் செல்லக் கிளியைக் கண்டதும், தன் காரியம் பழம்தான் என்று உறுதிப்படுத்திக் கொண்டான். ரயில் நிற்கும் ஐந்து நிமிடங்களுக்குள் பரபரவென்று தன் உடைமைகள் என்று உள்ள நாலைந்து உறையிட்ட தோல் பெட்டிகளை இறக்கினான். கடைசியாக, அவனையே வார்த்து எடுத்ததுபோல் டிப்டாப்பாக உடையணிந்த பத்து வயதுப் பாலகனைக் கையைப் பிடித்து மெதுவாக இறக்கிவிட்டான்.

பிரமை பிடித்தவள் போல் வியப்புற்ற நிலையில் எட்டி நின்று பார்த்துக் கொண்டிருந்த செல்லக் கிளியை அந்தப் பையனிடம் சுட்டிக்காட்டி, ''உன்னிடம் அடிக்கடி சொல்லிக்கிட்டிருப்பேனே! அந்த அம்மா இவங்கதான்!'' என்று அறிமுகப்படுத்தினான் கதிர்வேல்.

''அம்மா! வணக்கம்!'' என்று தன் மரியாதையைத் தெரிவித்துக் கொண்ட பாலகனை நீர் மல்கும் கண்களுடன் பரிவுடன் தன் பக்கத்தில் இழுத்து அணைத்துக் கொண்டாள்.

விக்கவும் முடியாமல் கக்கவும் முடியாமல் தடை போடப்பட்டிருந்த இத்தனை நாள் துக்கமும் அவளையும் அறியாமல் வெளிப்பட ஆரம்பித்தது. ஒருவாறு தன்னைச் சமனப்படுத்திக் கொண்டு விவரம் சரியாகப் புரியாத நிலையில், ''அவங்களையெல்லாம் கூட்டிக்கிட்டு வரலையா?'' என்று சற்று இழுத்தபடியே கேட்டாள் பேதை.

செல்லக்கிளி அவங்களையெல்லாம் என்று குறிப்பிட்டது அவனது சிங்கள மனைவியை என்று புரிந்து கொண்டு கொஞ்சம் தெம்பாகவே பதில் சொல்ல ஆயத்தமானான் கதிர்வேல்.

''அவளும், இன்னும் ரெண்டு பெண் பிள்ளைகளும் கலவரத்தில் செத்து வருஷம் இரண்டு ஆகுது. எப்படி உன் முகத்தில் விழிக்கிறதுன்னு இவ்வளவு நாட்களும் வர முடியாமல் தள்ளிப் போச்சு. சரவணன் தொந்தரவு பொறுக்க மாட்டாமத்தான் அவனையும் அழைச்சுக்கிட்டு வந்தேன்'' என்று உருமாறிய நிலையில் நின்று கொண்டிருந்த செல்லக்கிளியைப் பார்த்துப் பரிதாபமாகப் புன்னகை செய்தான்.

ஊரில், உலகத்தில், உயர் பண்பால் சிறந்தவளாய் நின்றாள் செல்லக்கிளி. பூக்காது தீஞ்சுவையான கனியைத் தரும் பலாமரம் போல் பாங்குடன் கப்பலேறி வந்த பிள்ளைக் கனியைத் தன் கனியாக்கிக் கொண்டாள்.

நீங்கள் எதைச்
செய்தாலும் உங்கள்
பாத்ரூமை அவ்வளவு
செவ்வையாகச்
சுத்தம் செய்ய
முடியாது—

# இரவில்
# தூவும் துளி
# சானி:ஃப்ரெஷ்




**அசிங்கமான
கறைகளைப்
போக்குகிறது**

**சிறிதும்
சிரமமின்றி
உங்கள்
பாத்ரூமை
பிரகாசிக்கச்
செய்கிறது**

உங்கள் குடும்ப
ஆரோக்கியத்தைப்
பாதுகாக்கிறது

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு
BALSARA

CHAITRA-BLS 8 TAM

# ஞானக்குயில்

ஜெகசிற்பியன்

## 23. பாதிக் கடிதம்

**ம**னோகரி சொன்ன விவரங்களைக் கேட்டு நரசிம்மன் எவ்வித சலனமும் அடைந்ததாகத் தெரியவில்லை. அவன் அமைதியாகச் சில விநாடிகள் அந்தப் புத்தர் பொம்மையைக் கூர்ந்து பார்த்து விட்டு மெல்லச் சிரித்துக் கொண்டே, ''என் அப்பா கடைசியாக வாங்கிக் கொடுத்த பொம்மையா இது? ரொம்பவும் யோசனை பண்ணித்தான் அவர் இதை வாங்கியிருக்கிறார்! பெற்ற மகனையும் கட்டின மனைவியையும் விட்டுட்டு ராத்திரியோடு ராத்திரியா எழுந்து ஓடிப் போனவர் இல்லையா புத்தர்? உலகத்துக்கு அவர் போதி சத்வரானார்; ஆனால் ராகுலனுக்கு?....'' என்று ஒரு கேள்வியுடன் பேச்சை நிறுத்திவிட்டு மனோகரியைப் பார்த்து மீண்டும் சிரித்தான்.

அவனிடம் வேறு ஏதோ ஓர் உணர்ச்சி வெளியீட்டை எதிர்பார்த்து அதற்கு நேர் எதிரானதைச் சந்திக்க நேர்ந்தவன்போல் முகம் வெளிறிச் சிறுத்துப் போன மனோகரி தான் விலக்கிப் பிடித்திருந்த திரையை மெல்ல இழுத்து மூடினாள். ''உங்களுக்குச் சிரமம் கொடுத்து விட்டேன்னு நினைக்கிறேன்; மன்னிக்கணும்'' என்றவாறு பின்னால் நகர்ந்தாள்.

''இப்படிச் சொல்றதுதான் என்னைச் சிரமப்படுத்தறாப் போல் இருக்குது!'' என்று கூறித் தனக்கே உரிய ஒரு சிறு பின்னைச் சிரிப்புச் சிரித்தான் நரசு. ''நீங்க ரெண்டு பேரும் இன்னும் சாப்பிடவில்லைபோல் இருக்குதே!'' என்றான் நிஜமான பரிவுடன்.

சட்டென்று திரும்பிய மனோகரி, ''சுகந்தி! எழுந்திரு. அம்மா நமக்காகக் காத்துக்கிட்டு இருப்பாங்க'' என்றாள். உடனே சுகந்தி எழுந்து ராட்டையை ஒருபுறமாக ஒதுக்கி வைத்துவிட்டுச் சாப்பாட்டு அறையை நோக்கிச் சென்றாள்.

தயங்கி நின்ற நரசு மிகத் தணிந்த குரலில், ''ஒரு விஷயம்....'' என்று இழுத்தான். மனோகரி அவன் பக்கம் திரும்பினாள்.

''இந்தப் பெண் யாருன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

''அம்மா உங்ககிட்டே சொன்னாங்க போலிருக்கே!''

''இல்லை; என்னைத்தான் இன்னாருன்னு அவளுக்கு அறிமுகப்படுத்தினாங்க.''

ஒரு கணம் யோசித்த மனோகரி, ''என் அம்மாவுக்குத் திடீர்னு உடம்பு சரியில்லாமல் போச்சு இல்லையா? இப்போ சொஸ்தமாயிட்டாலும் இனி கொஞ்ச நாட்களுக்கு அவங்களை ரொம்பவும் ஜாக்கிரதையாகக் கவனிச்சுப் பார்த்துக் கொள்ளணும்னு டாக்டர் சொன்னார். நானே இதைக் கவனிச்சுக்க முடியும். ஆனாலும் எனக்குத் துணையாக ஓர் ஆள் இருந்தால் நல்லதுன்னு அப்பா நினைச்சு இந்தப் பெண்ணை அழைச்சுக்கிட்டு வந்து வீட்டோடு அமர்த்தியிருக்கிறார்'' என்றாள்.

''ஓகோ!'' என்று தலையாட்டிக் கொண்ட நரசு மீண்டும் ஏதோ கேட்க வாயெடுத்துப் பிறகு தயக்கம் அடைந்தவன் போல் இளநகையுடன் அவளைப் பார்த்தான்.

அவன் கேட்க நினைத்ததை உடனே புரிந்து கொண்ட மனோகரி, ''இவளை எங்கேயிருந்து என் அப்பா அழைச்சு வந்தார்னு கேட்கிறீங்களா? ஒரு கிறிஸ்துவக் கன்னிகா மடத்திலிருந்து! அநாதைப் பெண்ணும்! என் அப்பா, அம்மாவுக்கு ஏனோ இம்மாதிரியான பெண்களை வீட்டிலே வேலைக்கு அமர்த்திக் கொள்கிறதில் ஒரு தனி ஆர்வமும் அக்கறையும் இருக்குதுன்னு நினைக்கிறேன். ரொம்ப காலத்துக்கு முன்னே இதே மாதிரி....'' என்று சொல்லி முடிப்பதற்குள் நரசு குறுக்கிட்டான்:







'' ஆமாம் ; அந்த அம்மாள் இப்போ எங்க வீட்டில்தான் இருக்கிறாங்க. பேர் பாக்கியத்தம்மாள்'' என்றான் சிரித்துக் கொண்டே.

''இன்னிக்குக் காலம்பறதான் அந்த விஷயத்தைப் பற்றிக் கேள்விப்பட்டேன். அப்பா சொன்னார்.''

பக்கத்து அறையில் டெலிபோன் மணி ஒலிக்கவே, ''ஒரு நிமிஷம்....'' என்று கூறியவாறு விரைந்து சென்றான் மனோகரி.

நாக அந்த அறையைக் கடந்து சென்றபோது அவள் உள்ளே டெலிபோனில், ''ஆமாம்!... ஓ! நீங்களா?.. அப்பா வெளியே போயிருக்கிறார் !..... இங்கே வரீங்களா?... எப்போ....? சரி சரி...'' என்று வியப்பும் திகைப்புமான நடுக்கக் குழறலுடன் பேசிக் கொண்டிருப்பது அவனது செவியில் இலேசாக இறங்கியது. ஆனால் அதை மனத்தில் வாங்கிக் கொள்ளாமல் மேலே நடந்து தன் அறைக்குச் சென்று கதவைச் சாத்திக் கொண்டான்.

அவனுக்குக் கொஞ்ச நேரம் படுத்து எழுந்திருக்க வேண்டும்போல் இருந்தது. கட்டிலில் சாய்ந்தான். உடம்புதான் அசதி காட்டியதே தவிர, தூக்கம் வரும் என்று தோன்றவில்லை. சற்று முன் சாப்பிட உள்ளே போன போது நடந்த பேச்சுக்களையும் சம்பவங்களையும் அவன் மனம் ஒவ்வொன்றாய்க் கோதிக் கொறிக்க முனைந்துவிட்டிருந்ததே, அதற்குக் காரணம் ஆயிற்று.

சுகந்தி என்ற அந்தப் பெண்ணைப் பற்றிய விஷயம் இப்போது அவனுக்குத் 'தெளிவாகி' விட்டதால் அதை இலேசாக ஒதுக்கிவிட்டு, மனோகரி தன்னை அழைத்துப் போய்த் தன் தந்தையார் அவனுக்கு எந்தக் காலத்திலோ வாங்கிக் கொடுத்த பொம்மைகளையும் விளையாட்டுச் சாமான்களையும் பத்திரப்படுத்தி வைத்திருப்பதைக் காட்டியது பற்றி



எண்ணிப் பார்க்கலானான். சற்று நேர அலசலுக்குப் பின் அதில் விசேஷமான 'அர்த்தப் பிசிர்' எதுவும் தட்டுப் படாமல் போகவே, அதையும் அப்படியே சரித்துத் தள்ளிய மறுகணம் அவனுடைய சிந்தனை வேறொரு திசையில் திரும்பச் சட்டென்று எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

ஆமாம்; மதியம் இங்கு வந்தவுடன் கண்ணம்மா பற்றிய தகவலை மனோகரியின் வாயிலாக அறிந்ததுமே, அவளைப் போய் நேரில் பார்த்து வரவேண்டும் என்ற துடிப்பு ஏற்பட்டது அவனுக்கு. ஆனால் வேறு சில எண்ணங்கள் தோன்றி அந்தத் துடிப்பை அடக்கிவிட்டன. இப்போது மீண்டும் அதே துடிப்பு, அதே எண்ணங்கள்:

'கண்ணம்மா இந்த நேரம் தனது வீட்டில் தன் தாயாரோடும் சகோதரனோடும் மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டிருப்பாள். என்னைப் பற்றி அவர்களிடம் ஏதாவது சொல்வாளா? என்ன விதமாய்ச் சொல்வாள்? என்னால் தான் அவள் தன் மாமா வீட்டிலிருந்து வெளியேறவும், அதனால் பல துன்ப துயரங்களை அனுபவிக்கவும் நேர்ந்தன என்று குற்றம் சுமத்துவாளோ? ஏற்கனவே என் மீது தவறான எண்ணம் கொண்டுவிட்டிருக்கும் அவசரப் புத்திக் காரனான திருமலை இதைக் கேட்டு இன்னும் அதிகக் காட்டம் அடைவானே! ஒருகால் நானே ஏதோ குயுக்தி செய்து அந்தப் பெண்ணை இவ்வீட்டுக்கு வரப் பண்ணிவிட்டுப் பிறகு ஒன்றும் தெரியாதமாதிரி அவனுடைய தாயாரிடம் போய் அவளைப் பற்றி விவரம் விசாரித்திருக்கிறேன் என்று அவன் நினைப்பானோ?'

நாசு வேகமாகத் தலையாட்டிக் கொண்டான்: 'சே! அந்தப் பெண் என்மேல் அப்படி எதுவும் பழி சுமத்த மாட்டாள். அத்தகைய எண்ணம் உடையவளாக இருந்தால், அன்றிரவு ரயிலில் டிக்கெட் இல்லாமல் ஏறித் தண்டனைக்கு உள்ளாகவிருந்த சமயம் நான் கொடுத்த டிக்கட்டை உடனே வாங்கிக் கொள்வாளா? அத்துடன் கடலூர் ஸ்டேஷனில் வண்டி புறப்படும்போது என்னைப் பார்த்து அத்தனை நன்றி உணர்ச்சியோடு புன்னகை பூத்திருப்பாளா?'

சற்றே நிம்மதியடைந்த அவன் மனத்தில் வேறொரு கேள்வியும் நிமிர்ந்தது: 'இந்தப் பட்டணத்துக்கு வந்த அவள் தன் வீட்டு விலாசம் தெரியாமல் கடந்த இரண்டு தினங்களாக எங்கெங்கோ சுற்றி அலைந்துவிட்டுக் கடைசியில் நான் தங்கியிருக்கும் இவ்வீட்டுக்கே எப்படியோ வந்து சேர்ந்திருக்கிறாளே! இந்த விலாசத்தை அவளால் எங்ஙனம் அறிய முடிந்தது? என் இருப்பிட விவரங்களைச் சொன்னவர்களே இவளை இங்கு அழைத்து வந்தும் விட்டுவிட்டுப் போயிருப்பார்களோ? அல்லது அவர்களிடம் வழி விவரம் மட்டும் கேட்டுக் கொண்டு அவளே தட்டுத் தடுமாறி வந்து சேர்ந்திருப்பாளோ?'

இப்போதே கிளம்பிப் போய் அவளைப் பார்த்துவிட்டு வர வேண்டும் என்ற துடிப்பு ஏற்பட்டது அவனுக்கு. அவசரமாக எழுந்து ஹாங்கரில் தொங்கிய ஷர்ட்டை எடுப்பதற்காக ஸ்டாண்டை நோக்கிச் சென்றான். அந்த ஸ்டாண்ட் உட்பக்கக் கதவோரம் இருந்தது. மறுபுறத்தில் கதவு தாழிடப்பட்டிருந்தது. இவ்வறையில் இருந்தபடியே அதைத்

திறக்க முடியாது. ஸ்டாண்ட் அருகில் சென்ற நரசுவின் பார்வையில் அந்தக் கதவு இடுக்கிலே ஒரு கடிதம் செருகியிருப்பது தென்பட்டது.

இவ் வறையிலிருந்து அக்கடிதத்தை அங்கே செருகியிருக்க முடியாது; மறு பக்கமிருந்தே அவ்வாறு செருக முடியும். கடிதத்தின் கால்வாசி முனை மட்டுமே இந்தப் பக்கம் நீட்டிக் கொண்டிருந்தது. யாரோ அவசரத்தில் அப்படிச் செருகி வைத்துப் பிறகு அதை எடுக்க மறந்து விட்டிருக்கலாம்.

இம்மாதிரியான ஒன்றைப் பார்க்கும் எவருக்கும் இயற்கையாகவே எழக்கூடிய ஓர் ஆவல் — அதைத் தொட்டுப் பார்க்க வேண்டும், எடுத்துப் பார்க்க வேண்டும், படித்துப் பார்க்க வேண்டும் என்ற ஓர் ஆவல் குறுகுறுப்பு — நரசுவுக்கும் இப்போது ஏற்பட்டது.

இவ்வளவு பெரிய பங்களாவில் இத்தனை நாகரிகமாக வசிப்பவர்களுக்குக் கடிதங்களை இப்படிக் கண்ட இடங்களில் செருகி வைக்கும் பழக்கமும் இருக்கிறதே என்று உள்ளூற ஆச்சரியப்பட்டுக் கொண்ட அவன் அக்கடிதத்தை மெல்ல இழுத்து எடுத்தான். ஏற்கனவே திறக்கப்பட்ட கடிதம் தான். வேதமூர்த்தியின் பெயருக்கு அது வந்திருந்தது. பிரித்துப் பார்க்கலாமா, அல்லது இருந்த இடத்தில் அப்படியே செருகி வைத்துவிடலாமா என்று ஒரு கணம் யோசித்தான். பேராசைகளைக் காட்டிலும் சிற்றாசைகளுக்கே வலிவு அதிகம் போலும்!

பிரித்துத்தான் பார்க்கலாமே என்னும் உள்ளுணர்ச்சிகளுக்கு வசப்பட்டுப் போன அவன் ஒரு போலியான அலட்சியத்துடன் அந்தக் கடிதத்தைப் பிரித்த மறுகணம், ஏதோ மின்னற் கொடியொன்று தன் கண்ணெதிரே தெளிந்து மறைந்தாற்போல் அதிர்ச்சியுற்றுப் பின்னால் நகர்ந்து, அதே பரபரப்போடு அக்கடிதத்தின் கடைசியில் 'இப்படிக்கு' என்ற வார்த்தைக்குக் கீழே பார்வையை ஓட்டினான். அது பாக்கியத்தம்மாள் எழுதிய கடிதம்!

அவன் இன்னும் அந்தக் கடிதத்தைப் படிக்கவில்லை; அதைப் பிரித்த உடனேயே அவனது பார்வை அதன் அடியில் செல்ல, அங்கு பாக்கியத்தம்மாள் என்று கையெழுத்திட்டிருந்ததைப் பார்த்தே அவன் அப்படி அதிர்ச்சியுற்றுத் திகைத்துப் போனான்.

அவள் ஏன் இக்கடிதத்தை எழுத வேண்டும்? அதுவும் வேதமூர்த்திக்கு?—

அளவுகடந்த வியப்புக்குள்ளான அவனால் சில விநாடிகள் வரையில் எழுத்துக்களின் வரிவடிவங்களைப் புலப்படுத்திக் கொள்ளவும் இயலாது போயிற்று. வெறும் கிறுக்கலாகத் தென்பட்ட அக்கடிதத்தை அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்துக் கொண்டிருந்த அவன் தன் உணர்ச்சிகளை ஒருவாறு சமகதிக்குத் திருப்பிக் கொண்டு கடிதத்தின் முதல் வரியின் மேல் பார்வையை ஏற்றினான்.

''மதிப்புக்குரிய ஐயா அவர்களின் சமூகத்துக்கு,

பிறந்தது முதல் இன்றுவரையில் அபாக்கியவதியாகவே வாழும் பாக்கியத்தம்மாள் நமஸ்காரம் பண்ணி, தாழ்மையுடன் எழுதும் சங்கதி யாதெனில்.....''

வீட்டு வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்கவே சட்டென்று திரும்பிச் சன்னல் வழியாகப் பார்த்தான் நரசு. களைத்த முகத்துடன் வேதமூர்த்திதான் காரை விட்டு இறங்கி உள்ளே வந்து கொண்டிருந்தார்.

'என்னிடம் பேசுவதற்காக அவர் நேரே இவ்வறைக்கு வந்துவிட்டால் என்ன செய்வது?'

நரசு அவசரமாக அந்தக் கடிதத்தை மடித்து முன்பு இருந்தபடியே கதவின் இடுக்கில் செருகிவிட முனைந்தான். ஆனால் உடனடியாக அப்படிச் செருக முடியவில்லை. இரண்டு மூன்று முறை முயன்றும் முடியாது போகவே, சட்டென்று அதைத் தன் ஜேபியில் திணித்துக் கொண்டான்.

அவன் நினைத்த மாதிரியே கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. ஷர்ட்டை எடுத்து மாட்டிக் கொண்டு விரைந்து போய்க் கதவைத் திறந்தான்.

# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

'காக்ரா' மற்றும் 'துப்பட்டா'களின் பாரம்பரிய நாகரீக கவர்ச்சிக்கு புதிய எழிலூட்டுகின்றன மபத்லாலின் 'மெஃப்ரின்' உடுப்புத் துணிகள். பாலியெஸ்டர் மற்றும் காட்டன் இழைகலந்த 'மெஃப்ரின்' பண்டைய கற்பனைகளுக்கு, நவநாகரீக ஒயிலோடு கூடிய வண்ணம், வடிவம் மற்றும் நெசவின் நேர்த்தியை இணைத்து, கிளர்ச்சியூட்டும் மறுமலர்ச்சியை அளிக்கிறது!

**மபத்லால் க்ரூப்** அளிக்கும் நேர்த்தியான துணிமணிகள்



**மெஃப்ரின்**
பாலியெஸ்டர் சேலைகள் மற்றும் உடுப்புத் துணிகள்

AIYARS-M.338 TM

''இருக்கிறீங்களா, தம்பீ? காலையில் வெளியே போய் இன்னும் திரும்பி வரலேயோன்னு நினைச்சேன்'' என்று புன்னகையுடன் கேட்டுக் கொண்டே வந்து ஒரு நாற்காலியில் அமர்ந்தார் வேதமூர்த்தி.

அந்தக் கடிதத்தால் ஏற்பட்டிருந்த வியப்பும் திகைப்பும், அதனைப் பழைய படி கதவிடுக்கில் செருக முடியாததால் கிளர்ந்த பரபரப்பும் சேர்ந்து முகம் வெளிறியவனாய் நின்ற நரசு, தன்னை எப்படியோ சமாளித்துக் கொண்டான். ''நான் மத்தியானமே வந்துவிட்டேன். வந்தவுடன் சாப்பிட்டுவிட்டுச் சும்மா கொஞ்ச நேரம் படுத்திருந்தேன்.....'' என்றான் குழறலாக.

''ச்சோ, ச்சோ! உங்க தூக்கத்தில் வந்து எழுப்பி விட்டேனா?''

''அதெல்லாம் இல்லே, சார்! பகலில் தூங்குகிற பழக்கம் இல்லே'' என்று அசட்டுச் சிரிப்புடன் சொல்லிக் கொண்டே ஓர் இருக்கையில் அடக்கமாக உட்கார்ந்தான் நரசு. அவர் முகத்தைப் பட்டும் படாமல் பார்த்துவிட்டு, ''நீங்க இன்னும் சாப்பிடவில்லேபோல் இருக்குதே!'' என்றான் சற்றுக் கரிசனமான குரலில்.

'' எங்க கம்பெனியின் டைரக்டர்கள் கூட்டத்திலே கலந்து கொள்கிறதுக்காகப் போயிருந்தேன்; அங்கேயே சாப்பிடும்படியாகி விட்டது'' என்று புன்னகையுடன் கூறியவாறு அந்த அறையைச் சுற்றி ஒரு நோட்டமிட்டார் வேதமூர்த்தி.

அவர் சாதாரணமாகத்தான் அப்படிப் பார்த்தார். ஆனால் நரசுவுக்கு அந்தக் கடிதம் இருந்த கதவிடுக்கை அவர் குறிப்பாகப் பார்ப்பதுபோல் படவே தன் பேண்ட் ஜேபியை மெல்லத் தொட்டுப் பார்த்துக் கொண்டு அப்படியும் இப்படியுமாக நெளிந்து நிமிர்ந்தான். பிறத்தியாருக்கு வந்த கடிதத்தைத் தான் எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறோமே என்ற குற்ற உணர்ச்சி அவனை அவ்வாறு நெளிய வைத்தது. அத்துடன், அந்தக் குழாய் உற்பத்திக் கம்பெனியின் டைரக்டர்கள் கூட்டத்துக்கு அவர் போய் வந்

## வானொலி நிலையம் அமைப்போம், வாருங்கள்!

பேச்சு, எழுத்து சுதந்திரத்தை இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம் நமக்கு அளித்திருக்கிறது. தனி மனிதருக்கு ஒரு பத்திரிகை ஆரம்பித்துக் கருத்துக்களை வெளியிடுவதற்கு உரிமை இருக்கிறது. ஒலிபரப்பும் சர்க்காரது தனிப்பட்ட உரிமையாக இருக்க வேண்டுமென்பதில்லை; அமெரிக்கா போல் தனியார் துறையிலும் வானொலி அமைக்கச் சுதந்திரம் உண்டு என்று சட்ட ஞானஸ்தர்கள் திட்டவட்டமாகக் கூறுகிறார்கள். அது வருங்காலத்தில் அமுலுக்கு வந்தால்? இதோ ஒரு கற்பனை:

### அண்ணா நிதி முத்து ஒலிபரப்பு நிறுவனம்

வாழ்த்து: நீராரும் கடலுடுத்த
அண்ணா அஞ்சலி.

நீங்கள் கேட்டவை: மந்திரி குமாரி, பிள்ளையோ பிள்ளை, பூம்புகார்.

பேட்டி: சைக்கிள் ரிக்ஷாக்காரர் —நமது நிருபர்.



கூவம் நதிக் கரையிலே - இசை நிகழ்ச்சி.

பாசறைச் செய்திகள்:

தமிழன் ஆட்சி - விமர்சனம்: சிலம்புச் செல்வர் திரு ம. பொ. சி., சிலம்புச் செல்வர் திரு மதுரை மாணிக்கம்.

வட்டச் செய்திகள்: வாசிப்பது முத்துவாணி.

துப்பாக்கி முனையில் - நாடகம்.
கலைஞர் திரு ராஜேந்திரன் குழுவினர்.

நியூஸ் ரீல்: கம்சன் கம்பெனி மூடி மூடித் திறக்கும் விழா.

ஒலிச் சித்திரம்: அப்பனோ அப்பன்.

பழந்தமிழர் வாழ்வில் கணக்கு - ஓர் ஆராய்ச்சி. புலவர் கோபாலன்.

கவி அரங்கு: கலைஞர் டாக்டர் முதல்வர் - தலைமை. காஞ்சி கண்ணபிரான், அன்பில் அருணாசலம். நெடுஞ்சடையன்.



ஊழல் உத்தமர் - ஒரு ஹாஸ்ய நாடகம்.

விவாத அரங்கு: மாநில சுயாட்சி. •தலைமை: கனம் நெடுஞ்செழியன்.

ஒலிச் சித்திரம்: திரு ஒ. பி. ராமன்.

தலைவர்கள் தாவுகின்றனர்: பிரசங்கம்.

ஏழையின் சிரிப்பு - ஒரு சாமானியன் உரையாடல்.

பாரதிதாசன் பாடல்கள்.

வரலாறு காணாத சாதனை: கலைஞர் முதல்வர் கனம் கருணாநிதி.

உலா வருவோம்: வரிசை-2 மாமல்லபுரம்.

திருக்குறள் வகுப்பு: அருள்மிகு அடிகளார்.

வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்; வாழிய இந்தியாவில் உள்ள தமிழ்நாடு! — கபஸ்ரீ

திருப்பதால் அங்கே நடக்கும் வேலை நிறுத்தம் சம்பந்தமாய் என்ன முடிவு எடுக்கப்பட்டது — கம்பெனி திறக்கப் படுவதற்கான சாத்தியக்கூறு ஏற்பட்டுள்ளதா — என்னும் விவரங்களைக் கேட்டறிய வேண்டும் என்ற துருதுருப்பும் அவனுள் கிளர்ந்தது. இவ்விரு வகையான உணர்ச்சிப் புழுக்கத்தால் இலேசாக வியர்த்துப் போன அவன் அவரைத் திருதிருவெனப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''எங்க கம்பெனி விவகாரம் என்ன ஆச்சுன்னு நீங்க கேட்கலியே!'' என்று மெல்லச் சிரித்தவாறு பேச்சை ஆரம்பித்தார் வேதமூர்த்தி.

சுறுசுறுப்புடன் நாற்காலியில் சற்று முன்னால் நகர்ந்து கழுத்தையும் நீட்டியபடி, ''அதைத்தான் கேட்கணும்னு நினைச்சுக்கிட்டிருக்கிறேன் சார்! அந்த வேலைநிறுத்தப் பிரச்னைக்குச் சுமுகமான தீர்வு எதனுச்சும் ஏற்பட்டு விட்டதா?'' என்று ரொம்பவும் பவ்யமாகக் கேட்டான் நரசு.

''ஏதோ ஒரு நிலுசாக முடிஞ்சது!'' என்று கசந்த குரலில் கூறினார் வேதமூர்த்தி. ''ஆனால் அதற்காக நான் ரொம்பவும் வாதாட வேண்டியதாகி விட்டது.''

''ஊழியர்களின் எல்லாக் கோரிக்கைகளையும் ஒப்புக் கொண்டாயிடுத்தா, சார்?''

''ஒண்ணைத் தவிர மற்றதையெல்லாம் ஏற்றுக் கொள்ளலாம்னு நிர்வாகத்தினர் முதலில் தீர்மானிச்சாங்க. அதற்கு ஊழியர்களின் சங்கப் பிரதிநிதிகளும் சம்மதம் தெரிவிச்சாங்க. நான் தான் அதை ஏற்றுக் கொள்ளலே.''

''அது எந்தக் கோரிக்கை?''

''இந்த வேலைநிறுத்தத்துக்கே மூல காரணமாயிருந்த ஓர் அசிஸ்டெண்ட் அக்கவுண்டெண்ட் பற்றின விஷயம்.''

''டிஸ்மிஸ் பண்ணப்பட்ட அந்த ஆளை மறுபடியும் வேலையில் சேர்த்துக் கொள்ள முடியாதுன்னுட்டாங்களா சார்?'' என்று தன்னை மீறிய ஆவலுடன் வினவினான் நரசு.

''ஆமாம்; நான் அதற்குச் சம்மதிக்கலே! அவனுக்கு அந்த உத்தியோகத்தைத் திரும்பக் கொடுத்தாகணும்னு வாதாடினேன். இல்லேன்னா, டைரக்டர்கள் போர்டிலிருந்து விலகிவிடுவேன்னும் சொன்னேன்.''

''அப்படீன்னா அந்த ஆளை உத்தியோகத்திலிருந்து நீக்கினது அநியாயம் என்று நீங்க நினைக்கிறீங்களா?''

''எனக்கு அதில் அபிப்பிராயம் எதுவுமில்லே. ஆனால் என்னுடைய வாதம் வேறு'' என்று சொல்லிச் சில விநாடிகள் மௌனமாயிருந்த வேதமூர்த்தி, ''அதாவது, அவனைத் தண்டிக்கத் திருத்தறதைவிட வாழ வைக்கத் திருத்தறதே மேலானதுன்னு நான் நினைக்கிறேன்'' என்றார் இளநகையுடன்.

''குற்றம் செய்தவன் அப்புறம் அதை எப்படி சார் உணர்வான்?'' என்று சற்றுக் குறும்பான குரலில் கேட்டான் நரசு.

''நான் சொல்றது இந்த ஆளைப் பொறுத்த விஷயத்துக்கு மட்டும்தான்'' என்றார் வேதமூர்த்தி. ''அவன் தன் கடமையில் ஏதோ தவறு செய்தான் என்கிறதுக்காகக் கம்பெனி நிர்வாகம் 'டிஸ்மிஸ்' செய்தது. இதற்கு அவன் தன் சகாக்களிடம் வேறு விளக்கம் கூறித் தன்னை நிரபராதியாகக் காட்டிக்கிட்டான். அதாவது, தங்கள் தொழிற்சங்க நடவடிக்கைகளில் தான் தீவிரமாகச் செயல்படறது பிடிக்காமல் நிர்வாகத்தினர் தன்னைப் பழி வாங்கி விட்டதாகச் சொல்லியிருக்கிறான். அவனுடைய சங்கச் சகாக்கள் அதை நம்பினாங்களோ, இல்லையோ — ஆனால் அவனை டிஸ்மிஸ் பண்ணின விவகாரத்தையே ஒரு கருவியாக்கிக்கிட்டுத் தங்களின் வேறு அபிலாஷைகளைச் சாதிச்சுக்க வேலைநிறுத்தத்தைத் தூண்டி விட்டுட்டாங்க. அவனை மறுபடியும் வேலையில் அமர்த்தணும் என்கிற கோரிக்கையை முதன்மையாக வைச்சே முதலில் வேலைநிறுத்தம் ஆரம்பமாச்சு. மறு நாள் அந்த விஷயம் பின்னுக்குத் தள்ளப்பட்டுப் புதிதாய்ச் சில கோரிக்கைகள் முளைச்சன; அப்புறம் அவையே பிரதானமாகின. இன்னிக்குக் கம்பெனி நிர்வாகத்தினர், ஊழியர் சங்கப் பிரதிநிதிகளை அழைச்சுப் பேசின போது, தங்களுக்கு ஆதாயமுள்ள கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டால் போதும் என்கிற மனப்பான்மையோடு அந்த அப்பாவியின் விஷயத்தை அப்படியே அம்போன்னு விட்டுவிட யூனியன் சம்மதிச்சது! ஒருவன் நாலு பேருக்குக் கெடுதலாக நடந்து கொள்கிறதை வேணுமானால் கண்டும் காணாததுபோல் இருந்துவிடலாம்; ஆனால் நாலு பேர் சேர்ந்து ஒருத்தனைக் கெட்டழியச் செய்யறதை மட்டும் அனுமதிக்கவே கூடாது. அதனால்தான் அந்த ஆளை மறுபடியும் வேலையில் அமர்த்தியே ஆகணும்னு பிடிவாதம் பிடிச்சேன்.''

நரசு அவரையே கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

(தொடரும்)

# இன்ஸ்பெக்டர் விக்ரம்

கதை: அசித் சூர்த்தி
படம்: பிரதாப் முல்லிக்
7

அடேயப்பா எத்தனை துப்பாக்கிகள்! எத்தனை ஆட்கள்! உண்மையான வீரம் இங்கல்லவா இருக்கிறது!

கதாநாயகியால் நான் கண்டதை நம்பவே முடியவில்லை.

அவர்கள் என் கட்டளைக்குக் கீழ்ப்படிபவர்கள்; இன்று முதல் நம் கட்டளைக்குக் கீழ்ப் படிவார்கள்.

என்னால் நம்பவே முடியவில்லை!

அவர்களை எனக்கு ஆரஞ்சு ஜூஸ் கொண்டு வரச் சொல்லுங்கள்.

ஹாஹாஹிஹி... ஹி... ஹி... ஹோ... ஹோ... ஹா... ஹா...!

எதற்குச் சிரிப்பு?

10.17

அன்பே! கொள்ளைக்காரர்களின் ராணி துப்பாக்கி கேட்பாள்; பழரசம் அல்ல!

சரி. ஒரு துப்பாக்கி கொடுங்கள்!

இந்தா!

எடுத்துக் கொள்; இது உனக்குத்தான்!

ஏதாவது சிறிய மிருகமாயிருந்தால் சுடலாம்.

மாலக்! அந்த நரியைக் கொண்டுவா, இங்கே!

நீ கேட்டதைக் கொண்டு வரச் சொல்கிறேன்.

மாலக் ஒரு கைதியை இழுத்து வந்தான்.

யார் இவன்?

மரத்தில் கட்டு அவனை!

(தொடரும்)

# மைக்ரோஃபைன்ட்
# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனால்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது—

**சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது.**









சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அதிவேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்றன.

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோ:.பைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி • ஜலதோஷம் • :.ப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

**ஆஸ்ப்ரோ** மட்டுமே **மைக்ரோ:.பைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.**

நிகோலஸ் Ⓝ தயாரிப்பு

A.G.57 TM

# மனம் திருந்தினேன்



திருவாளர் தாசரதி புகையிலை சகிதம் வெற்றிலை பாக்குப் போட ஆரம்பித்தது 1952ம் ஆண்டில். அப்போது அவருக்கு வயது இருபத்திநான்கு. அதற்கு முன்னர் எப்போதாகிலும் வெறும் வெற்றிலை மட்டுமே போடுவாராம். அதாவது வெற்றிலை போடுவதைப் பழக்கமாகக் கொண்டிருக்கவில்லை. புகையிலை உபயோகிக்க ஆரம்பித்த புதிதில் நாள் ஒன்றுக்குச் சராசரி ஏழு எட்டுத் தடவைகள் போடுவாராம். நாளடைவில் புகையிலைக்கு அவர் அடிமையாகிவிட்ட நிலையில், சாப்பிடும்போதும், தூங்குகிற நேரமும் நீங்கலாகச் சதா புகையிலையை அடக்கிக் கொண்டிருப்பார். "அப்போதுதான் மூளை சுறுசுறுப்பாக இயங்குவதுபோலவும் ஆபிசில் நன்றாக வேலை செய்ய முடிவது போலவும் இல்லாவிட்டால் ஏதோ 'டல்' ஆக இருப்பதுபோலவும் தோன்றும்" என்றார் இந்த அரசு ஊழியர்.

"சீவல் உபயோகிப்பீரா அல்லது பாக்கா?"

"முதலில் பதினைந்து வருஷ காலம் கொட்டைப் பாக்குச் சீவல்தான் உபயோகித்தேன். பின்னர் அதனை விடுத்து ஐந்து வருடங்கள் பாக்கு உபயோகிக்கத் தலைப்பட்டேன். இப்போது தோன்றுகிறது — சீவலே தொடர்ந்து உபயோகித்திருக்கலாமே, என்று."

"புகையிலை?"

"பன்னீர்ப் புகையிலைதான் பல வருடங்கள் உபயோகித்து வந்தேன். பிறகு அதை விடுத்துப் பொட்டலம் உபயோகிக்க ஆரம்பித்தேன்.."

"புகையிலையின் அளவில் ஏதாவது வேறுபாடு உண்டா? அதாவது—பன்னீர்ப் புகையிலை எவ்வளவு போடுவீரோ அதே அளவுதான் சாதாரணப் புகையிலையும் போடுவீரா?"




"அளவில் வித்தியாசம் ஏதுமில்லை. ஏதோ என் கால வித்தியாசம்தான்... ஒரு தடவை வெற்றிலை போட்டால் அரை மணி நேரம் புகையிலை உள்ளிட்ட அக்கலவையை வாயில் அடக்கிக் கொண்டிருப்பேன். அந்த நேரத்தில் வேலை செய்யவும் உற்சாகமாக இருக்கும். நாடகம் பார்த்துக் கொண்டிருந்தாலும் சரி, சங்கீதக் கச்சேரி கேட்டுக் கொண்டிருந்தாலும் சரி — அந்தப் பழக்கம் உள்ளவர்கள் வாயில் வெற்றிலைக் குதப்பலுடன் ரசிக்கும் விதமே அலாதிதான். ஆனால் வெற்றிலை — பாக்கு — புகையிலைக் கலவையை வெகு நேரம் அவ்வாறு வாயில் அடக்கிக் கொண்டிருப்பது மிகவும் தீங்கு விளைவிக்கும் என்பதை மறுப்பதற்கில்லை. அனுபவபூர்வமாகத்தான் அதை உணர்ந்து விட்டேனே!" என்று தாசரதி கூறியபோது அவர் முகத்தில் வலிய வரவழைத்துக் கொண்டு தவழவிட்ட புன்னகையையும் மீறி, உள்ளார்ந்து படரும் சோகத்தின் சாயலையும் நான் காணத் தவறவில்லை.

"காலையில் எழுந்தவுடன் பல் துலக்குமுன்பே சிலர் வெற்றிலை பாக்கு புகையிலை போடுவதுண்டே — நீங்கள்?"

"காப்பி சாப்பிட்ட பிறகுதான் போடுவேன்."

"துப்பிய பிறகு ஒவ்வொரு தடவையும் நீரால்வாயைக் கொப்பளிப்பதுண்டா?"

"இடையாது! அப்படியெல்லாம் எச்சரிக்கையுடன் இருந்திருந்தால் இந்த உபத்திரவமே வந்திராதே! நான் இந்தப் பழக்கத்தை விட்டொழித்ததைத் விளக்கிச் சொல்கிறேன், கேளுங்கள்: ஒரு நாள் வாயினுள் கன்னக்கதுப்பின் உட்புறம் வெள்ளையாக ஒரு திட்டு ஏற்பட்டது. வாயின் உட்புறம் சதை வளர்ந்து வெளியே—அதாவது கன்னத்தின் உட்புறம் நீட்டிக் கொண்டிருந்தது. வலி ஏதும் இல்லை. நானாகவே சில வைட்டமின் மாத்திரைகள், பி-காம்ப்ளெக்ஸ் மாத்திரைகள் சாப்பிட்டேன். புண்ணாக இருக்கும், ஆறிப்போய்விடும் என்று நம்பினேன். அது மறையவில்லை. டாக்டரிடம் சென்றேன். 1971ம் ஆண்டு ஜூலை மாதம். அன்றுமுதல் இன்றுவரை — இரண்டு வருடங்களுக்கு மேல் ஆயிற்று — வெறும் வெற்றிலை பாக்குக்கூடப் போடுவதில்லை. அறவே நிறுத்திவிட்டேன்.. நிறுத்தும்படி ஆயிற்று!"

"டாக்டர் என்ன சொன்னார்?"

"பயாப்ஸி பரிசோதனை செய்தார். ரத்தப் பரிசோதனை, எக்ஸ்-ரே — எல்லாச் சோதனைகளும் முடிந்த பிறகு 'எபிடர்மாய்ட் கார்ஸிநோமா' (Ephedermoid Corci-noma) என்றார்..."

"அப்படியென்றால்?"

படம்!

புற்றுநோய் மற்றும் அழற்சியைக் குணப்படுத்த கோபால்ட் கதிர்களைத் துல்லியமாகக் கணக்கிட்டுச் செலுத்த 'கம்ப்யூட்டர்' சாதனத்தை மேற்கு ஜெர்மன் மருத்துவ நிபுணர்கள் பயன்படுத்துகிறார்கள். எந்த இடத்தில் கதிர் வீச்சு செலுத்த வேண்டுமென்பதனைப் படவடிவிலும் கம்ப்யூட்டர் தெரிவித்துவிடும்.

''கான்சர் எனப்படும் புற்றுநோய்க்கு மருத்துவ பாஷையில் அந்தப் பெயர். அப்புறம் சிகிச்சை ஆரம்பமாகியது. முதலில் ஒரு பக்கத்துப் பற்களை யெல்லாம் பிடுங்கி விட்டார்கள். பதினாறு பற்களை இழந்தேன்! அடுத்து, ஆழ்ந்த எக்ஸ்ரே சிகிச்சை (Deep X-Ray Therapy). விட்டுவிட்டுப் பதினாறு முறைகள். வெறும் மோர்தான் ஆகாரம். வேறு எதை வாயில் போட்டாலும் ஒரே எரிச்சல்! ஆரஞ்சுப் பழச் சாறு, இளநீர், மோர் — இந்த உணவில் இருபது நாட்களை ஓட்டினேன். என் நல்ல காலம், தாமதியாமல் டாக்டரிடம் போனேன். காலம் கடந்து மருத்துவரிடம் போயிருந்தால் நிலைமை விபரீதமாகி யிருக்கும்! ஏறக்குறைய ஆயிரம் ரூபாய் செலவு! புகையிலை போடும் பழக்கத்துக்கு விடுதலை கொடுத்து இரண்டு வருஷங்களாயிற்று. இதில் முக்கியமானது என்னவென்றில், சிகிச்சை முடிந்து விட்டதே என்று நாம் சும்மா இருந்துவிடக் கூடாது. மருத்துவமனையில் ஓர் அட்டை கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் அதில் குறித்துள்ளபடி அவ்வப்பொழுது மருத்துவ மனைக்குச் சென்று சோதனை செய்துகொள்ள வேண்டும். ஒருகால் அதே இடத்திலோ, அல்லது உடலின் வேறு ஏதாவதோர் இடத்திலோ என்றாலும் அந்த நோய் மீண்டும் தலைகாட்டக் கூடும்! அநேகமாக வராமலும் இருக்கலாம். புகையிலைப் பழக்கத்தை விட்ட பிறகு எதையோ இழந்து விட்ட மாதிரி வாழ்க்கை 'சப்'பென்றுதான் இருக்கிறது. இருந்தாலும் அதைக் கைவிட்டுத்தான் ஆக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டு விட்டதல்லவா?'' என்றார் தாசரதி ஏக்கத்துடன்.

'புகையிலை போட்டுக் கொண்டிருந்தபோது வாயில் எரிச்சல் ஏற்பட்டதுண்டா?' என்று கேட்டதற்கு அவர் கூறினார்: ''வெற்றிலைச் சாற்றின் காரம், சுண்ணாம்பு, புகையிலை, இவற்றின் காரம் எல்லாமாகச் சேர்ந்து, வாயில் எப்போதுமே ஒரு விறுவிறுப்பு இருந்து கொண்டுதான் இருக்கும். நமக்கு இப்படி ஏதாகிலும் நோய் இருக்குமோ என்று சந்தேகிக்கவே தோன்றாது. வெறும் வெற்றிலை பாக்குக் கூடப் போடாமலே இருப்பவர்களுக்கும் சில சமயம் புற்றுநோய் வருகிறது. அதிலும் வாயிலேயே வருவதும் உண்டு. இருப்பினும் இந்தப் பழக்கத்தையே மேற்கொள்ளாமல் இருந்திருந்தால் நமக்கு இப்படி ஓர் உபத்திரவம் ஏற்படாமலேயே இருந்திருக்கலாமல்லவா என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது'' என்றார் திருவாளர் தாசரதி.

(பெயர் மட்டும் கற்பனை) **பேட்டி: பாணன்**

---



## பேயாவது, பெருங்காயமாவது!

தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம் வெளியிட்டுள்ள நான்காம் வகுப்புக்கான தமிழ்ப் பாட புத்தகத்தில் இடம் பெற்றுள்ள பத்தாவது பாடம் 'பொறுமையே பெருமை தரும்'.

நான்காம் வகுப்பில் பயிலும் குழந்தைகளுக்கு ஒன்பது அல்லது பத்து வயதுதான் இருக்கும். அவர்களின் உள்ளத்தில் எதைச் சொன்னாலும் பசுமரத்தாணி போல் பதியும் பருவம்.

அந்தக் குழந்தைகளுக்கான பாடத்தில் பேய் வருவதாகச் சித்திரிக்கப்படுகிறது.

இது சிறுவர்களின் உள்ளங்களைப் பாதிக்கும்.

சிறு குழந்தைகளுக்கு ஒன்றைச் சொல்லிப் பயமுறுத்திவிட்டால் அந்தப் பயம் வாழ்நாள் முழுவதும் போகாது. அப்பயத்தைப் போக்குவது அரிது என்று உளநூல் வல்லுநர்கள் கூறுகின்றனர்.

அவ்வாறிருக்கப் பேயைப் பற்றிக் கூறும் பாடத்தைத் தமிழ் நாட்டுப் பாட நூல் நிறுவனம் சிறுவர், சிறுமியர்களுக்குச் சொல்லித் தரலாமா?

பேய் என்பது பெரியவர்களுக்கான கற்பனையே தவிர சிறியவர்களுக்கு அல்ல.

பேயாவது? பெருங்காயமாவது?

எனவே குழந்தைகளுக்குப் பேயைப் பற்றிக் கூறும் பாடத்தை உடனடியாக அகற்ற வேண்டுமாய்த் தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

கரூர் — 2
20—8—73 எஸ். ஜெயராமன்

கல்கி 19-8-73 தேதி இதழில் பஜன ரத்னாகரம் என்ற நூலுக்கு விமர்சனம் எழுதப்பட்டுள்ளது. ஆனால் தலைப்பு தவறுதலாக பாரத ரத்னாகரம் என்று அச்சாகி விருப்பதைச் சுட்டிக் காட்டுமாறு என்னை அந்நூலின் தொகுப்பாசிரியர் ஸ்ரீ அனந்தானந்தேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆக்ஞாபித்துள்ளார்கள்.

முகாம்: ஏ. எஸ். பி. பந்த்,
ரிஷிகேஷ் மானேஜர்,
23-8-73 ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமி மடம், காஞ்சிபுரம்

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# ஒரே ஒரு காசு செலவில் 1 சேலை அல்லது 3 சட்டைகள் பனிபோல் வெண்மை பெற...

# மாக்ஸிம்*

எல்லா துணிகளுக்கும் உகந்த ஏற்றமிகு ஒயிட்னர்

**எவ்வளவோ சிக்கனமானது!**

எந்த ஆடையாக இருந்தாலும் சரி, அதற்குப் புத்தம் புதிய வெண்மை ஒளியேற்ற சராசரி ஒரு துளி மாக்ஸிம் போதும். ஒவ்வொரு மாக்ஸிம் பாட்டிலும் சுமார் 1200 துளிகள் கொண்டது என்பது உங்களுக்குத் தெரியுமோ என்னவோ! எனவேதான் மாக்ஸிம் மிகவும் சிக்கனமான, வீரியமுள்ள நீலநிற, திரவ வடிவ ஒயிட்னராக விளங்குகிறது. மேலும் விசேஷ ட்ராப்பர் மூடி கொண்ட பிளாஸ்டிக் பாட்டிலாக இருப்பதால், இன்னும் லாபம். ஏனெனில் தேவைக்கு மேல் ஒரு துளி கூட சிந்தாது. எனவே துளியும் வீணாவதில்லை, துணியும் நீலம் படிவதில்லை.







**எல்லா துணிகளுக்கும் ஏற்றது**

எல்லாவித துணிகளுக்கும் நீங்கள் மாக்ஸிம் உபயோகிக்கலாம். 'டெரீன்', 'டெரீன்'/காட்டன், நைலான், உல்லன், சில்க் மற்றும் காட்டன் போன்ற எல்லா துணிகளுக்கும் மாக்ஸிம் வெண்மையூட்டி புதிய மெருகேற்றுகிறது. தவிர, மாக்ஸிம் துணியில் கறை ஏற்படுத்துவதுமில்லை.

**உபயோக முறை மிகமிக எளிது**

மாக்ஸிம் உபயோக முறை மிகமிக் எளிதானது. துணிகளை முதலில் சோப் அல்லது பிற சலவைச் சாதனங்கள் மூலம் சுத்தமாக துவைத்து நன்றாக அலசி எடுக்கவும். பிறகு வாளியிலுள்ள (5 லிட்டர்) நல்ல தண்ணீரில் 10-15 துளிகள் மாக்ஸிம் விட்டுக் கலக்கவும். (பழுப்பேறிய துணிகளென்றால் கொஞ்சம் கூடுதல் துளிகள் மாக்ஸிம் சேர்க்கவும்) பின்பு துணிகளை 10—15 நிமிடங்களுக்கு அதில் ஊறவைக்கவும். மீண்டும் அலச வேண்டாம். அப்படியே உலரவிடவும்.



ஒவ்வொரு காசுக்கும் உரிய பலனைத் தருகிறது மாக்ஸிம்

GHM-33 TAM

*Regd. T.M. Geoffrey Manners & Co., Ltd.

Registered No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
ஸ்ரீலங்காவில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)